

பண்டைக்காலத்தில்
மன்னர்கள் இதற்காகவே
போர் தொடுத்திருப்பார்கள்.
மாங்காய் மாலை — அழகுமிக்க ஒரு பாரம்பரியம் வழி வழியாக வந்த சிறந்த கலை. தங்கத்திலே ஒரு மகத்தான படைப்பு. அதிலே வைரமும் மரகதமும் மாணிக்கமும் அழகுறப் பதிப்பு. இது செல்வந்தைப் பறைசாற்றும் சிறப்பு. மாங்காய் மாலை — மேத்தா ஜுவல்லரியின் திறமை, தேர்ச்சி மற்றும் கைவினைத் திறனுக்கு இது ஒரு சிறந்த எடுத்துக்காட்டு.
வைரம், மணிக்கற்கள், தங்கம் மற்றும் வெள்ளியில் மிகச் சிறந்த படைப்புகள்... இவை எல்லாம் மேத்தா பாரம்பரியத்தின் ஓர் அங்கம். 100 ஆண்டுகளுக்கும் மேலாக இணைந்து பெற்ற அனுபவத்துடன் மேத்தா நிறுவனத்தார் தங்கள் கலையிலும் கைவினைத் திறனிலும் கருத்துடன் கவனம் செலுத்திக் கடமையே கண்ணாக இருக்கின்றனர் — இவர்களுடைய படைப்புகளில் உள்ள தரமும் தனித்தன்மையுமே இதற்குச் சான்று. பாபாலாலில் இவர்கள் பெற்ற பல்லாண்டு அனுபவம், இவர்களுடைய கடமை உணர்ச்சி, செய்யும் பணியில் சிறந்த தரம் ஆகியவற்றால், சிறந்ததையே நாடுவோர் பார்வையில் இவர்கள் உயர்ந்ததோர் இடத்தைப் பிடித்திருக்கிறார்கள்.
வாடிக்கையாளர்களுக்கு அளிக்கப்படும் தனிப்பட்ட சேவையின் மூலம், மாறிவரும் இன்றைய உலகில் மாறாத நற்பண்புகளைக் கொண்டுள்ளதாகத் திகழ்கிறது மேத்தா பாரம்பரியம்.
என்றும் மாறாத பாரம்பரியச் சிறப்பு.
Mehta
JEWELLERY
40, திருமலைப் பிள்ளை ரோடு, தி.நகர்,
ஜி.என்.செட்டி ரோடு பிரிவு
சென்னை-600 017. போன்: 8283130
காலை 9.30 முதல் பிற்பகல் 1.30 வரை
பிற்பகல் 2.30 முதல் மாலை 6.30 வரை

அடுத்த இதழ்...

# தீபாவளி சிறப்பிதழ்





- இப்படித்தான் பிறக்கிறது இவர்கள் பாட்டு...!

- தீபாவளி ரிலீஸ் படங்கள் : ஒரு Dரை கிளீன்!















- ஸ்வீட் ஸ்பெஷல்! சிறப்புப் பக்கங்கள்!

- சாலமன் பாப்பையா எழுதும் (நகைச்) சுவையான கட்டுரைத் தொடர் ஆரம்பம்!



அதிக பக்கங்கள்!

## பெங்களூர் ரிப்போர்ட் :

# தொப்பை போட்ட

வீரப்ப மொய்லியை எதிர்க்கும் எம்.எல்.ஏக்களுக்கெல்லாம் எடை கூடிப் போய் தொப்பை போட்டு விட்டது என்று கேலி செய்கிறது ஒரு பத்திரிகை. காரணம் என்னவாம்? காலையில் எஸ். எம். கிருஷ்ணா வீட்டில் டிபன் சாப்பிடுகிறார்களாம். பகலில் ராஜ சேகரமூர்த்தி வீட்டில் மதிய உணவாம்... மாலையில் மனோரமா வீட்டில் டீ பார்ட்டியாம்... இரவு பங்காரப்பா வீட்டில் விருந்தாம்... இப்படி சாப்பிட்டுக் கொண்டிருந்தால் உடம்பு ஊதாமல் என்னாகும் என்கிறது அந்தப் பத்திரிகை!

"ஜாபர் ஷெரீஃப் எக்கச்சக்க ஊழல்கள் செய்திருக்கிறார். பெங்களூரைச் சுற்றியுள்ள ஏகப்பட்ட அரசாங்க நிலங்களைப் பினாமி பெயர்களில் குடும்பத்தாருக்கு வளைத்துப் போட்டிருக்கிறார். இதற்கெல்லாம் உதவி செய்தவர் வீரப்ப மொய்லி. அதனால்தான் மொய்லிக்கு ஆதரவாக இருக்கிறார் ஷெரீஃப்!" என்று சிலர் குற்றம் சாட்டியதும் திடுமென்று ஷெரீஃப் மீது விசாரணைக்கு உத்தரவிட்டு விட்டார் மூர்த்தி. இதனை மொய்லியோ ஜாபர் ஷெரீஃபோ சற்றும் எதிர்பார்க்கவில்லை. மொய்லியிடம் நிருபர்கள் கேட்ட போது, "என்னுடன் இது பற்றி விவாதிக்கவில்லை. எனக்



* ராஜசேகரமூர்த்தி



* மனோரமா

# திசைகள்

குருவாயூர் தேவசம் போர்டு, குருவாயூர் கோயிலை நிர்வகிக்க ஏற்பட்டது. அது சம்பந்தமில்லாமல் "குருவாயூர் மகாத்மியம்" என்ற பெயரில் திரைப்படம் எடுக்கிற காரியத்தில் இறங்கப் போக, 17 லட்சம் ரூபாய் நஷ்டம்! திரைப்படத் தயாரிப்பின் போதும் விநியோகத்துக்கு டெண்டர் விட்ட வகையிலும் பல தில்லுமுல்லுகள் நடந்திருப்பதாகக் குற்றச்சாட்டுக்கள் வேறு. விசாரணை நடத்திய கமிஷன், 'நஷ்டத்தை தேவசம் போர்டே ஏற்க வேண்டும்' என்ற மகத்தான (!) தீர்ப்பை வழங்கி விட்டது. கோயில்களுக்கு பக்தர்கள் அளிக்கும் காணிக்கையைப் பொறுப்புணர்வோடு கையாளும் பண்பை அறங்காவலர்கள் என்றுதான் பெறப் போகிறார்களோ!

உலகிலேயே மிகக் குறைந்த வயதில் பத்திரிகை ஆசிரியனாக இருப்பவன்(ர்) மில்லந்த் தேசாயாகத்தான் இருக்க வேண்டும். வயது பன்னிரண்டு! இச் சிறுவன் ஒரு ஹீமோபீலியா நோயாளி என்பது உள்ளத்தை உருக்கும் விஷயம். பள்ளிக்குச் செல்வது இதனால் பாதிக்கப்பட்டதும், ஒரு பத்திரிகையில் பணிபுரியும் தந்தை ஹரி தேசாய், சொந்தத்தில் ஒரு பத்திரிகை ஆரம்பிக்குமாறு மகனை ஊக்குவிக்க, "மன்தன்" என்ற குஜராத்தி சஞ்சிகை ஆரம்பமானது. முதல் இதழ் 1000 பிரதிகளும் உடனே விற்றுப் போய் விட்டனவாம். இத்தனைக்கும் 25 பக்கங்களே கொண்ட இப் பத்திரிகையின் விலை ரூ 5! பத்திரிகை நடத்துவதுடன், வீட்டிலேயே படித்து மூன்று வருஷத்தில் பள்ளி இறுதிப் பரீட்சை (SSC) எழுத உத்தேசமாம்.

இன்னொரு உலக ரிக்கார்ட் வேணுமானால், பம்பாயில் மார்ச் மாதத்தில் நடந்த குண்டு வெடிப்பு சம்பந்தமான கோப்பு மலையைக் குறிப்பிடலாம். 1.23 மில்லியன் பக்கங்கள் இதில் அடங்கியுள்ளன! இதுவும் போதாதென்று அரசுத் தரப்பு வழக்கறிஞராக நியமிக்கப்பட்டுள்ள உஜ்வல் நிகம், "RDX இங்கு கடத்தப்பட்டு வந்து சேர்ந்தது பற்றிய இன்னும் நிறையத் தகவல்கள் சேகரிக்கப்பட்டு வருகின்றன, எனவே நவம்பர் 6 வரை விசாரணையை ஒத்தி வைக்க வேண்டும்" என்று கோரியுள்ளார்!

பூகம்ப நிவாரண நிதி பலரும் போட்டி போட்டுக் கொண்டு வசூலித்து வருகிறார்

# எம்.எல்.ஏக்கள்!

குக் தெரியாது'' என்று வியப்பைத் தெரிவித்தார் மொய்லி.

கோபமுற்ற ஜாபர் ஷெரீஃப், ''ஒரு மத்திய அமைச்சரான என் மீதே விசாரணைக்கு உத்தரவிடுகிறார் உங்கள் மந்திரி சபையிலிருக்கும் ஒரு மந்திரி. அதுவும் உங்களுக்குக் கூடத் தெரியாமல்! நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?'' என்று மொய்லியிடம் போனில் சத்தம் போட்டார் என்று தகவல். பாவம், மொய்லி என்ன செய்ய முடியும்? ''நான் கவனிக்கிறேன்.'' என்று சொல்லி இரண்டு நாட்கள் கழித்து ராஜசேகரமூர்த்தி உத்தரவிட்ட விசாரணைக்குத் தடைவிதித்தார். அதற்கென ராஜசேகரமூர்த்தி நியமித்திருந்த ஐ.ஏ.எஸ். பெண் அதிகாரியான வீணா ஸ்ரீராமராவை உடனடியாக அந்தப் பதவியிலிருந்து நீக்கி மைசூர் எலெக்ட்ரிகல்ஸ் என்ற நிறுவனத்தின் சேர்மனாக அனுப்பி வைத்தார்.

ஜாபர் ஷெரீஃப் மீது காங்கிரஸிலுள்ள அமைச்சரே ஊழல் குற்றம்சாட்டியதை எதிர்க்கட்சிகள் பிடித்துக் கொண்டன. ''ஷெரீஃப் உடனடியாகப் பதவி விலக வேண்டும்!'' என்றார் ஜனதா தளத் தலைவர் தேஷ்பாண்டே.

கர்நாடகத்தில் எந்தப் பிரச்னை என்றாலும் உடனே களத்தில் குதித்து ஒரு கலக்குக் கலக்கும் ஏ.கே. சுப்பையா, அவசர அவசரமாய் நிருபர்கள் கூட்டத்தைக் கூட்டினார். ''ராஜசேகரமூர்த்தி, ஜாபர் ஷெரீஃப் மீது சாட்டியுள்ள குற்றங்கள் அனைத்தும் உண்மைதான். ஏகப்பட்ட நிலங்களை வளைத்துப் போட்டிருக்கிறார் அவர். அதே சமயம், ராஜசேகரமூர்த்தியும் யோக்கியர் இல்லை. நகரத்துக்குள்ளேயிருக்கும் மிகப் பெரிய எட்டு ஆடம்பர பங்களாக்களை பினாமி பெயரில் வாங்கிப் போட்டிருக்கிறார் ராஜசேகரமூர்த்தி. இது பற்றியும் விசாரணை நடத்த வேண்டும்...'' என்றார்.

இதற்கிடையில் எதிர்ப்பாளர்களுடன் சேர்ந்திருந்த உணவு அமைச்சர் மனோரமா மாதவராஜ், மொய்லி அணிக்குத் திரும்பி வந்து விட்டதாகத் தெரிகிறது!

இப்படியாக கர்நாடக அமைச்சரவையில் நடக்கும் சடுகுடு போட்டிகள் அமைச்சரவையை பாதித்து, நிர்வாகத்தை பாதித்து, காங்கிரஸ் கட்சியின் இமேஜையும் தகர்த்து வருகிறது.

– பெர்னாண்டஸ்



❋ கோப்புகள் மலை



❋ வசந்தா நந்தகுமார்

கள் என்றாலும், பம்பாய்ப் பட உலகைச் சேர்ந்த ராஜேந்திர (ஜுப்ளி) குமாரை வெல்ல ஆளில்லை என்றுதான் கூற வேண்டும். சிங்கப்பூர் சென்று தனி மனிதனாக இவர் வசூலித்து வந்துள்ள தொகை ரூ 11.5 லட்சம்!

முப்பத்தாறு வயதில் தமது கணவனை ஒரு விபத்தில் இழந்த சோகத்தை மறக்க சமூகப் பணியில் இறங்கினார் புதுடில்லியில் வாழும் தமிழ்ப் பெண்மணி வசந்தா நந்தகுமார். எம்.ஏ. பட்டதாரியான இவர், தமிழ்நாட்டிலிருந்து வந்து டில்லி பங்களாக்களில் வீட்டு வேலை செய்யும் 6000 ஏழைப் பெண்களின் நலனில் அக்கறை கொண்டார். ஆயிரக்கணக்கானவருக்கு ரேஷன் கார்டு பெற்றுத் தந்தார். 25 பேருக்கு மேல், இவர் உதவியால் வீட்டு மனைப் பட்டா பெற்றனர். கால்காஜி என்ற தொகுதியில் தற்போது டில்லி சட்டசபைக்கு ஜனதா தளம் சார்பில் வேட்பாளராக நின்று போட்டியிடும் வசந்தா, இத்தொகுதியில் நான்கு தட்டெழுத்துக் கூடங்களை சமூக சேவையாகவே நடத்துகிறார். கல்யாண்புரியில் தமிழ்ப் பெண்மணிகளுக்காக மூன்று இரவுப் பள்ளிகளைத் திறந்திருக்கிறார். 1984-ல் சந்திரசேகரின் பாத யாத்திரையில் பங்கு பெற்ற வசந்தா, வித்தியாசமானவர். ''என் கணவர் இருந்திருந்தால் என்னை அரசியலில் புக அனுமதித்தே இருக்க மாட்டார்'' என்று சோகத்தினிடையிலும் சத்தியத்தையே பேசுகிறார்!

திருவனந்தபுரத்திலிருந்து :
எஸ். எஸ். மணி

பம்பாயிலிருந்து :
அம்ருதா பார்த்தசாரதி

டில்லியிலிருந்து :
ஆர். விஜயராகவன்



● எழில் கொஞ்சும் தீவுகளின் அழகிய மக்கள்



● விருமான்

● டியூனா மீன்கள்



# அலைகள் தாலாட்டும் அற்புதத் தீவுகள்!

பிரதமராக இருந்த போது, ராஜீவ் காந்தி குடும்பத்துடன் (அமிதாப் பச்சன் உடன் வர) லட்சத் தீவுகளுக்குப் போனாலும் போனார், யாருக்கும் தெரியாமல், அரபிக் கடலில் அங்கங்கே சிந்திக் கிடந்த இந்தத் தீவுகளுக்குத் திடீர் என்று மவுசு வந்து விட்டது!

கொப்பரைத் தேங்காய்களையும் மீன்களையும் விற்று, தங்கள் வாழ்க்கையை அமைதியாக நடத்திக் கொண்டிருக்கும் இந்தத் தீவுவாசிகள், இப்போது திடீர் திடீரென்று கப்பலில் வந்து இறங்கும் இந்தியப் பயணிகளை உற்சாகத்துடன் வரவேற்கிறார்கள்.

''இங்கே இருக்கிற முப்பத்தாறு தீவுகளில், பத்து தீவுகளில் மட்டுமே மக்கள் வசிக்கிறார்கள். மீதி இருபத்தியாறிலும் ஒரு மனிதக் குஞ்சு கூடக் கிடையாது!'' என்று கல்பேனி தீவில் நாங்கள் கால் வைத்ததும் சந்தித்த முதல் நபர் ஹனீஃபா கோயா சொன்னார். அரசின் மீன் வளர்ப்புத் துறையில் அதிகாரி.

''வாருங்கள், என் வீட்டுக்குப் போகலாம்!'' என்றார் ஹனீஃபா.

சென்ற இடம், அவர் மனைவி டாக்டர் மும்தாஜ் பேகத்தின் வீடு! கோழிக்கோட்டில் எம்.பி.பி.எஸ். முடித்தவர். இங்கே கல்பேனி மருத்துவமனையில் டாக்டர்.

''பிள்ளைதான் இங்கே வரதட்சணை கொடுத்துத் திருமணம் செய்து கொள்ள வேண்டும். பிறகு அவளுடன் வாழ, அவள் வீட்டுக்கே வர வேண்டும். பெண்ணின் படிப்பும், அந்தஸ்தும் உயர, உயர வரதட்சணையும் உயரும்!'' என்றார் ஹனீஃபா.

முஸ்லிம் மக்களே 99 சதவிகிதம்.

**சமீபத்தில் லட்சத் தீவுகளுக்குச் சென்று வந்த நமது நிருபர் சாருகேசி, தாம் கண்டவைகளை இங்கே தருகிறார்.**

ஆனால் இவர்களை ஷெட்யூல்ட் பழங்குடியினர் என்கிறார்கள்.

தென்னஞ்சோலைகள் அடர்ந்த சின்னஞ்சிறு கிராமம், கல்பேனி. கடற்கரைக் கிராமத்தின் இயற்கை அழகும், மணலும் துல்லியமாகப் படர்ந்த தீவு. தென்னை ஓலைகளின் சரசரப்பும், கரையில் மோதிச் சுருண்டு சோர்ந்து திரும்பும் அலைகளின் பொருமலும் அவ்வப்போது கேட்கிறது.

கிராமத்தில் உள்ளவர்களை எண்ணினால் நாலாயிரத்தைக் கூடத் தாண்டாது. பசுவும், எருமையும் இல்லை! குப்பலாகக் கேட்பாரற்றுக் கிடக்கிறது பறித்த தேங்காய்!

**ல**ட்சத் தீவுகளின் தலைநகரான கவரத்தியை, கல்பேனியிலிருந்து ஓர் இரவு நேரக் கப்பல் பயணத்தில் அடையலாம்.

கவரத்தியில் தலைமைக் காவல் துறை அதிகாரி டி.என். மோகனைச் சந்தித்த போது சொன்னார் :

''லட்சத் தீவுகளில் 'கிரைம்' கிடையாது. அரசியல் அடிதடி கூடக் கிடையாது!'' கொடுத்து வைத்தவர் இந்த எஸ்.பி. (கொஞ்ச நாளைக்கு நம்மூர் கிரைம் எழுத்தாளர்களை இங்கே அனுப்பி வைத்தால் என்ன?)

அரசியலில் இரண்டே இரண்டு கட்சிகள்தாம். ஒன்று இ.காங்கிரஸ். இன்னொன்று ஜனதா தளம். அதனால் ஆணோ, பெண்ணோ, பிறக்கும் குடும்பத்தைப் பொறுத்து பிறவியிலேயே எந்தக் கட்சியைச் சேர்ந்தவர் என்பது தீர்மானிக்கப்பட்டு விடுகிறது. கட்சி மாறுகிற வேலையே இல்லை!

''எப்படிப்பட்ட பொருளாதாரம் இங்கே?'' என்று கேட்டோம், கலெக்டர் விஜயனிடம்.

''தேங்காயும், மீனும்தான் விற்பனை. அதைப் பொறுத்துத்தான் பொருளாதாரம். மிகச் சிறிய சதவிகிதம் அரசு அலுவலர்கள். மூன்று கோடி ரூபாய் இங்கேயே திரட்டப்படுகிறது. மீதி 97 கோடி ரூபாய் மத்திய அரசின் மானியமாகக் கிடைக்கிறது!'' என்றார் விஜயன்.

''ஏன், சுற்றுலாவைப் பெரிய அளவில் செய்து நிறையப் பணம் சம்பாதிக்கலாமே?''

''சுற்றுச் சூழல் கெடாத அளவுக்கு (Eco-Friendly) சுற்றுலாத் திட்டங்களைச் செயல்படுத்துவதுதான் எங்கள் நோக்கம். ஏராளமான பயணிகளை வரவழைத்து விட்டு, அவர்களுக்குக் குடிநீருக்கு எங்கே போவோம்? மேலும், அவர்கள் போட்டு விட்டுப் போகும் பிளாஸ்டிக் குப்பைகளை யார் சேகரித்து, எங்கே போடுவது?''

தீவின் தூய இயற்கையைப் பாழடிக்க இவர்கள் தயாரில்லை. ''குறைந்தபட்சப் பயணிகளே வர வேண்டும். அவர்களிடமிருந்து வசூலிக்கும் பணம் சற்று அதிகமாய் இருந்தாலும், அவர்களுக்குப் பூரண திருப்தி அளிக்கும் வசதிகளைக் கொடுத்து விட வேண்டும். இதுதான் எங்கள் டூரிசம் பாலிஸி!'' என்கிறார் விஜயன்.

**தே**ங்காய் நார் தயாரிப்புத் தொழிற்சாலை, தேங்காய் எண்ணெய் உற்பத்தி செய்யும் தொழிற்சாலை, இளநீரிலிருந்து வெல்லம் தயாரிக்கும் முயற்சி - தவிர, லட்சத் தீவுகளில் குறிப்பாக மினிகாய் தீவில் கிடைக்கும் விசேஷ வகை ட்யூனா மீன்களைப் பதப்படுத்தி, தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யும் தொழிற்சாலை, இவையே இப்போதைக்கு இங்கு இயங்குகின்றன.

பங்காரம் தீவுகளுக்கு, இந்தியப் பயணிகளோடு அயல்நாட்டு சுற்றுலாப் பயணிகள் நிறையவே வருகின்றனர். (இந்தத் தீவை மட்டும் இதற்காகவே ஒரு பெரிய ஓட்டல் குத்தகைக்கு எடுத்திருக்கிறது.) வாயுதூத், ஹெலிகாப்டர் வசதிகள் இருக்கின்றன. பிற தீவுகளுக்கு, அயல்நாட்டுச் சுற்றுலாப் பயணிகளை அனுமதிப்பதில்லை.



பவழங்களைப் பறிப்பது குற்றம். குப்பை போடுவது குற்றம்! கைக்

கெட்டும் உயரத்தில் தென்னை மரங்களில் இளநீர் காய்த்துக் குலுங்கினாலும், பறித்தால் குற்றம்!

லட்சத்வீப் டைம்ஸ் வார இதழ், தீவுகளின் செய்திகளைத் தொகுத்து வெளியிடுகிறது.

லட்சத் தீவுகளின் மக்களவைப் பிரதிநிதியாக 25 வருடங்களுக்கு மேலாக இருந்து வரும் பி.எம். சயீத், இன்று மத்திய உள்துறை இணை அமைச்சர்.

**மா**லத் தீவுகளை ஒட்டி அமைந்துள்ளது மினிகாய் தீவு. இங்கே பெண்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் சுதந்திரமும், முக்கியத்துவமும் அசாதாரணமானது. மனைவியின் குடும்பப் பெயரைத்தான் திருமணத்துக்குப் பின் கணவன் தன் பெயரோடு இணைத்துக் கொள்ள வேண்டும்! குடும்ப நிர்வாகம் முழுக்கப் பெண்கள்தாம். ('பெண்களின் தீவு' என்றே மார்க்கோ போலோ மினிகாயைக் குறிப்பிட்டிருக்கிறார்!)

40 குடும்பங்கள் சேர்ந்தால் ஒரு கிராமம். ஒரு கிராமத்துக்கு ஒரு 'மூப்பன்' - அதாவது தலைவன். 'வில்லேஜ் ஹவுஸ்' என்ற கிராம நிர்வாக சபையில், ஆண்கள் போலவே பெண்களுக்குப் பிரதிநிதித்துவம் உண்டு.

பெண்ணாய்ப் பிறந்தால் லட்சத் தீவுகளில் பிறக்க வேண்டும்!

**ல**ட்சத் தீவுகளின் அழகுக்கும் கவர்ச்சிக்கும் அவற்றின் 'லகூன்'களே முக்கியக் காரணம். கடலுடன் தொடர்புள்ள ஆழமில்லாத பகுதியைத்தான் 'லகூன்' என்கிறார்கள். இந்தப் பகுதியைச் சுற்றி, பவளப் பாறை நீருக்கடியில் படர்ந்திருக்கிறது. இடையே நீர் தேங்கிய, வட்ட வடிவப் பவழப் பாறைகளைப் படகுகளில் சென்று பார்க்கிறவர் எளிதில் கரைக்குத் திரும்புவதில்லை. அத்தனை அழகு. லகூனில் பயமின்றி நீந்தி, நீந்திக் குளிக்கவும், வண்ண வண்ணமான சிறு படகுகளில் உல்லாசமாக உலா வரவும் லட்சத் தீவுகளைப் போல வேறு எங்காவது இருக்குமா என்பது சந்தேகம்தான்.

*(லட்சத் தீவுகள் பற்றிய விரிவான பயணக் கட்டுரை கல்கி தீபாவளி மலரில் யோகாவின் வண்ணப்படங்களுடன் வெளியாகிறது.)*

– சாருகேசி

படங்கள் : யோகா



# உங்கள் மழலைச் செல்வம் அவனது, மென்மையான மிருதுவான உலகம்.



## அவனுக்கு நீங்கள் கொடுக்கும் முதல் திட உணவும் அவனைப் போலவே மிருதுவாக இருக்கட்டும்.

உங்கள் குழந்தைக்கு இப்பொழுது 4 மாதங்களாகிறது. இச்சமயம் அவனுக்கு தாய்ப்பால் மட்டுமல்லாமல் வேறு வகை உணவும் தேவை. ஏதாவது ஒரு திட உணவு. அதே சமயம் நீங்கள் அவனுக்கு தரும் திட உணவு மிருதுவானதாகவும் போஷாக்கு நிறைந்ததாகவும் இருந்திடல் அவசியம்.

ஆம், நெஸ்டம் தரும் போஷாக்கு போல - இது எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம். அரிசியிலிருந்து தயாரிக்கப்படும் நெஸ்டம், உங்கள் மழலைச் செல்வத்தின் மிகச் சரியான முதல் திட உணவாக அமைகிறது.

பாலுடன் நெஸ்டம் சேர்த்து உங்கள் குழந்தைக்கு விருப்புடன் ஊட்டுங்கள். இந்த ஆகாரத்தின் மூலம் அவன் வேகமாய் வளர்வதற்கு வேண்டிய எல்லா போஷாக்கு சக்திகளும் கிடைக்கின்றன.

உங்கள் செல்ல மகன் வளர வளர, நீங்கள் அவனுக்கு படிப்படியாய் புதிய ருசியுள்ள உணவு வகைகளை அறிமுகப்படுத்த வேண்டும். இவ்வகை ருசியை நீங்கள் எளிதில் மிருதுவாய் ஆரம்பிக்க நெஸ்டம் உங்களுக்கு உதவுகிறது. நெஸ்டம், பால் சேர்க்காத ஒரே குழந்தை ஆகாரமாய் இருப்பதால், இதை மிகச் சுலபமாய் மற்ற உணவு வகைகளுடன் கலந்திட முடியும். உதாரணமாய், குழைய வைத்த வாழைப்பழம் காய்கறிகள் மற்றும் தயிருடன் உங்கள் குழந்தைக்கு நெஸ்டம் கொடுங்கள். நெஸ்டம் தரும் எல்லா வித மிருதுவான தனிச் சிறப்பான போஷாக்குகளுடன் அவன் வளருவதைப் பாருங்கள்.




லேபிளில் குறிப்பிடப்பட்டுள்ள விதி முறைகளை கவனமாய் பின்பற்றுங்கள்.

**நெஸ்டம்**

எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம்.

இலவசம்
நெஸ்டம் செய்முறை
புத்தகத்திற்கு எழுதுங்கள். போஸ்ட் பேக் 25.
புதுடில்லி-110016

TS McCann/NESTUM/1492 TM

முக்கிய அறிவிப்பு : உங்கள் குழந்தைக்கு தாய்ப்பால்தான் மிகவும் சிறந்தது. உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதில் இருந்து தாய்ப்பாலுடன் குழந்தைத் தானிய உணவும் கொடுங்கள்



✱ செல்வி ஹேமலதா

# சேலத்தில் உதிக்கும் நம்பிக்கை நட்சத்திரங்கள்!

**பி**. டி. உஷாவின் கால்களை மான்களின் கால்களுடன் ஒப்பிட்டு டெல்லி தூர்தர்ஷனில் ஒரு துண்டுப்படம் வரும். சேலம் சாரதா மகளிர் கல்லூரி மாணவி, செல்வி ஹேமலதாவின் கால்களைப் பார்க்கும் பொழுது, அதே ஞாபகம் தான் வருகிறது. நீள, நீளமான கால்கள். ஏ.எஸ். முதலியார் நினைவாக சமீபத்தில் காஞ்சிபுரத்தில் நடைபெற்ற பல்கலைக் கழகங்களுக்கு இடையிலான தடகள விளையாட்டுப் போட்டிகளில் பழைய ரெகார்டுகளை முறியடித்துப் புதிய சாதனை படைத்த கால்கள்!

கம்ப்யூட்டர் ஸயின்ஸில் இளநிலை முதலாமாண்டு படிக்கும் ஹேமலதாவின் தடகள விளையாட்டு ஆர்வம் அவர் எட்டாவது படிக்கும் போதே தொடங்கிவிட்டது. அப்போதே மாநில அளவில் நடைபெற்ற 800 மீட்டர் ஓட்டப் பந்தயத்தில் முதலிடம் பெற்றுவிட்டார்!

சாரதா மகளிர் கல்லூரிக்கு மேலும் பெருமை சேர்க்கும் விதமாக அதே கல்லூரியில் பி.ஏ. சரித்திரம் இரண்டாம் ஆண்டு பயிலும் செல்வி வனிதா, ஈட்டி எறியும் போட்டியில் ஒரு வியத்தகு சாதனையைப் படைத்துள்ளார். அவர் எறிந்த ஈட்டியின் தூரம் 42.72 மீட்டர். இதன் பழைய சாதனை வெறும் 39.90 மீட்டர் மட்டுமே. அதுவும் 1989 ல் வைக்கப்பட்ட தேசிய சாதனை!

இவர்கள் தவிர, இதே கல்லூரியைச் சேர்ந்த செல்வி சீதாரமணி காஞ்சிபுரம் விளையாட்டுகளில் உயரம் தாண்டுதலில் முதல் இடத்தைப் பெற்றுள்ளார்.

**சா**ரதா மகளிர் கல்லூரியைச் சேர்ந்த மாணவிகளே இப்படி முதலிடங்களைப் பெற்றதற்கு ஏதேனும் சிறப்புக் காரணங்கள் உண்டா?

கல்லூரியின் உடற்பயிற்சித் துறை தலைமைப் பயிற்றுவிப்பாளர் திருமதி ஹசீனா பேகத்தைச் சந்தித்துப் பேசினோம்.



✱ செல்வி வனிதா

''மாணவிகள் தடகள விளையாட்டுக்களில் சிறப்புற விளங்க வேண்டும் என்றால் கல்லூரி, பெற்றோர், கோச் ஆகிய மூன்று விஷயங்கள் சிறப்புற அமைய வேண்டும். மைதானத்தில் பயிற்சி பெறச் செல்லும் மாணவிகளுக்குக் கல்லூரி முழு சுதந்திரம் அளிக்க வேண்டும். வருகைப் பதிவில் தேவையான அளவு சலுகை அளிக்க வேண்டும். படிப்பு என்று வரும் பொழுது விளையாட்டு மாணவிகளின் ஆசிரியர்களும், ஆசிரியைகளும், தனி அக்கறை எடுத்துக் கொண்டு, விட்டுப் போன பாடங்களுக்கும், பரிசோதனைகளுக்கும் தனி வகுப்புகள் நடத்த வேண்டும். செமஸ்டர் தேர்வுகள் என்றால் இன்டெர்னல் அஸெஸ்மென்ட் இருக்கும். அவைகளை விளையாட்டு மாணவிகளுக்கு அவர்களுடைய போட்டிகள், பயிற்சிகள் இவை பாதிக்கப்படாத அளவுக்கு வேறு தனியான இன்டெர்னல் தேர்வுகள் நடத்த வேண்டும். இவற்றோடு பெற்றோர்களும் பெண்களின் விளையாட்டு விஷயத்தில் முழு ஒத்துழைப்பை நல்க வேண்டும்.

''மிக மிக முக்கியமான விஷயம், கோச்சிங். மகாபாரதப் போரில் அர்ஜுனனுக்கு பார்த்தசாரதி எவ்வளவு முக்கியமோ அந்த அளவுக்குத் தடகள விளையாட்டு வீரர்களுக்கு, வீராங்கனைகளுக்கு கோச் அவசியம்.''

செல்வி ஹேமலதாவும், வனிதாவும் இப்படி ஒரு சாதனை படைக்க யார் காரணம் என்றால், அனைவரும் கைகாட்டுவது அவர்களுடைய கோச், கிஷோர் குமாரை.

முப்பது வயது இளைஞரான கிஷோர் குமார் ஆந்திர மாநிலமான விசாகபட்டினத்தைச் சேர்ந்தவர். ஆரம்பத்தில் சாரதா ஃபிஸிகல் எஜுகேஷனல் சென்டரில் கோச்சாக இருந்து, பிறகு ஸ்போர்ட்ஸ் அதாரிடி ஆப் இந்தியாவின் பிரிவு சேலத்தில் தொடங்கப்பட்டதும் அதில் தம்மை இணைத்துக் கொண்டவர். அவரைச் சந்தித்த போது, ''மிக நன்றாக ஓடும் திறமையுள்ள பெண் ஹேம்லதா. எட்டாவது வகுப்பிலிருந்து அவரது ஓட்டத்திற்குத் தனிப்பட்ட பயிற்சி அளித்து வருகிறேன். Killer Instinct, இயற்கையளித்த சக்தி இரண்டும் இவரிடம் உண்டு. கடுமையான பயிற்சிக்குத் தம்மை ஈடுபடுத்திக் கொள்கிறார்.



கிஷோர் குமார்

ஹேமலதாவுக்கு உள்ள ஒரே குறை சரியான போட்டியாளர் இல்லை என்பதே. நேரக் கணக்கு உள்ளது என்றாலும் சரிக்குச் சமமாகப் பின்னால் ஒரு மாணவி துரத்துகிறாள் என்றால் கிடைக்கும் சக்திக்கும், ஓடும் வேகத்திற்கும் தனி சாதனை இருக்கும். இதைத் தவிர்க்க, National Records நேரங்களில் ஓடும் ஆண் போட்டியாளர்களுடன் ஓடவைக்கிறேன். அவரது கால்களுக்குத் தனிப்பயிற்சி அளிக்கிறேன். Weight-running, Hill-running, Steps running எனப் பலவித பயிற்சிகள் அளிக்கிறேன்.

''1992 ல் முழங்காலில் ஹேமலதாவுக்கு ஃப்ராக்சர் ஏற்பட்டு சின்ன ஸ்குரு வைத்து மைனர் ஆபரேஷன் செய்ய வேண்டியதாயிற்று. அதன் பிறகு சிறிது நம்பிக்கை யிழந்திருந்த அவருக்கு தைரியம் கொடுத்து, சின்னச் சின்ன போட்டிகளில் ஜெயிக்க வைத்து, இப்பொழுது முழுமையான நிலையில் கொண்டு வந்து நிறுத்தியுள்ளேன். அதே போல வனிதாவுக்கும் ஈட்டி எறிதலில் சிறந்த முறையில் பயிற்சியளித்து வருகிறேன். இந்த இரண்டு பேராலும் இந்தியாவின் பெருமை சர்வதேச அளவில் உயரும் நாள் வெகு தூரத்திலில்லை!'' என்றார். கூறும் பொழுது, அவர் கண்களில் அப்படியொரு நம்பிக்கை மின்னல்!

– சத்தியப்பிரியன்

---

''ஆட்சிக் கலைப்பை எதிர்த்து அந்த அமைச்சர் போட்ட 'ரிட்' மனுவைத் தள்ளுபடி பண்ணிட்டாங்களாம்.''

''ஏன் அப்படி?''

''தேர்தலுக்குச் செய்த செலவைக் கூட இன்னும் சம்பாதிக்கலை, அதுக்குள்ள எப்படி ஆட்சியைக் கலைக்கலாம்னுல்ல 'ரிட்' மனுவுல கேட்டிருந்தார்!''

– சீர்காழி வி. ரேவதி.



# இந்தப் பாப்பா செய்வது தப்பா?

• டாக்டர் வி. தங்கதுரை

பதிமூன்று வயதான அந்தப் பெண்ணால், ஒருநாள் எந்தவித ஆகாரத்தையும் உட்கொள்ள முடியாமல் போனது. விழுங்குவதில் சிரமம் ஏற்பட்டிருக்கிறது என்று புரிந்து கொண்ட பெற்றோர், அலறிப் புடைத்துக் கொண்டு, குழந்தை நல மருத்துவரிடம் கூட்டிக் கொண்டு போய்க் காண்பித்தார்கள்.

அந்தப் பெண்ணைப் பரிசோதித்த மருத்துவர், அவள் உணவுக் குழாயில் கட்டி இருக்கிறது என்றும், உடனே ஆபரேஷன் செய்து அகற்ற வேண்டும் என்றும் கூறினார்.

மருத்துவர் சொன்னபடியே அப் பெண்ணை மருத்துவமனையில் சேர்த்தார்கள். ஆபரேஷனும் நல்லபடியாக முடிந்தது. உணவுக் குழாயிலிருந்து கட்டியை அகற்றிய மருத்துவர், அக் கட்டியைக் கீறிப் பார்த்த பொழுது, அதில் ஒரு மோதிரம் இருந்தது தெரியவந்தது.

அதிர்ச்சியடைந்த மருத்துவர், பெற்றோரை விசாரித்தார். அதற்கு அவர்கள், அந்த மோதிரம் அப்பெண்ணின் முதல் ஆண்டு நிறைவு அன்று போடப்பட்டது என்றும், இத்தனை நாட்கள் அது தொலைந்து விட்டது என்று நினைத்திருந்ததாகவும் கூறினார்கள்.

மருத்துவருக்குப் புரிந்தது. அப் பெண்ணிற்குச் சிறு வயதில் வாயில் விரல் போட்டுக் கொள்ளும் பழக்கம் இருந்திருக்கிறது என்கிற தீர்மானத்திற்கு வந்தார்.

தன் சந்தேகத்தை, அந்தப் பெற்றோரிடமும் கேட்டுத் தெளிந்தார்.



"விரல் சூப்புதல்" (Thumb sucking) என்னும் பழக்கம் அநேக குழந்தைகளுக்கு இருந்து வருகிறது. இது சரியா, தவறா என்பது பற்றி யாதொரு தீர்மானமான கருத்தும் இன்றி, குழந்தை, வாயில் விரல் போட்டுக் கொள்ளும் போது 'சீ.. எடு கையை' என்று தட்டி விட்டு - அது அசிங்கம் என்கிற அளவில் மட்டும் மறுதலிக்கிறோம். உண்மையிலேயே இது தீய



பழக்கம் தானா? இதில் பின்விளைவுகள் ஏதும் ஏற்பட வாய்ப்பு இருக்கிறதா? இதில் குழந்தையின் மனோரீதியான பிரச்னைகள் ஏதும் வர வாய்ப்பு இருக்கிறதா?

அநேக சந்தேகங்கள் - அநேகமாக அத்தனை பெற்றோர்களுக்கும்.

டாக்டர் தங்கதுரை பிரபல குழந்தை நல மருத்துவர். அவரிடம் இது குறித்துக் கேட்ட போது சொன்னார் :



### அடிப்படைக் காரணம் என்ன?

''விரல் சூப்புதல்'' என்பது இயற்கையாகவே பிறக்கும் ஒரு குணம். எப்படி உடலின் ஒவ்வொரு அங்கமும், ஒவ்வொரு செயலுக்காகச் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறதோ, அது போல் 'கன்னம்' என்கிற அங்கத்திற்கு உண்டான இயற்கையான 'தேடல்' என்று கூட இதைச் சொல்லலாம். வாய் மற்றும் கன்னத்திலுள்ள தசை நார்களுக்கென்றே உண்டான ஒரு பிரத்தியேகத் திருப்திக்காக உண்டானதுதான் இந்தப் பழக்கம்.

### எந்த வயதில் ஆரம்பிக்கிறது?

பிறந்த குழந்தை, தாய்ப்பால் குடிக்கத் தொடங்கும் நாட்களிலிருந்தே இந்தப் பழக்கமும் ஆரம்பிக்கிறது. குழந்தைக்குத் தாயிடம் பால் குடிக்க யார் கற்றுத் தருகிறார்கள்? அது போல்தான் விரல் போடும் பழக்கமும்.

குழந்தை பிறந்த சில நாட்கள் அல்லது சில மாதங்களில் இந்தப் பழக்கம் ஆரம்பிக்கிறது. தன் வாய்க்குத் தேவையான திருப்தி எதில் கிடைக்கிறதோ, அதைப் பெற குழந்தை விரும்புகிறது. ஆகையால் வெறும் வாயாக இல்லாமல், ஏதோ திருப்தி தரும் ஒரு பொருளுடன் ஈடுபடுத்திக் கொள்வதில் ஆர்வம் காட்டுகிறது. அந்தத் திருப்தியைத் தாய் பாலூட்டும் பொழுதோ, சூப்பான்கள் என்று சொல்லப்படும் ரப்பர் மூலமாகவோ அல்லது தன் விரல்களின் மூலமாகவோ பெறுகிறது.

### எதனால் தூண்டப்படுகிறது?

எந்தெந்தத் தூண்டுதல்களினால் இந்தப் பழக்கம் உண்டாகிறது என்று ஆராய்ச்சி செய்யப்பட்டதில் சில உண்மைகள் புரிந்தன. அதாவது, மனோரீதியாகக் குழந்தைகள் சில உணர்வுகளை வெளிப்படுத்தத் தெரியாமல் இப் பழக்கத்திற்கு ஆளாகிறார்கள்.

1. சலிப்பு (Bore) என்பது குழந்தைகளுக்கும் உண்டு. தன்னை எதிலுமே ஈடுபடுத்திக் கொள்ளத் தெரியாத வேளையில் -

2. பால் குடித்து வயிறு நிறைந்த போதிலும், உறிஞ்சிக் குடித்த திருப்தியை (sucking) அடையாத பொழுது - (தாய்ப்பால் குடிக்கும் குழந்தை, பாட்டில் பால் குடிக்கும் குழந்தை, பாலாடை அல்லது ஸ்பூன் மூலம் குடிக்கும் குழந்தை என எல்லா வகையினருக்கும் பொருந்தும்).

3. தான் விரும்பிக் கேட்ட பொருள் கிடைக்காத பொழுது, விரக்தியை வெளிப்படுத்தும் தருணத்தில் -

4. மூன்று அல்லது நான்கு வயதில் சில குழந்தைகள் ஏக்கம் காரணமாக -

5. பள்ளிக்குப் போக ஆரம்பிக்கும் காலகட்டத்தில், அச்சக் கோளாறின் (Phobia) காரணமாக -

6. எல்லாவற்றிற்கும் மேலாக வாயில் விரல் போட்டுக் கொள்ளும் சமயத்தில் 'தான் மிகவும் தன்னம்பிக்கையுடன், பாதுகாப்பாக இருக்கிறோம்' என்கிற ஆழமான எண்ணம் மனத்தில் பதிந்து விடுகிறது.

### எப்பொழுது நிவர்த்தியாகும்?

'கட்டை விரல் சூப்புதல்' (Thumb sucking) என்று பெயர்தானே தவிர, கட்டை விரல் அல்லாமல், இரண்டு அல்லது மூன்று விரல்களைக் கூட வாயில் போட்டுக் கொள்ளும் குழந்தைகள் உண்டு.

என்ன செய்வதென்று தெரியாமல், விரல் போட்டுக் கொள்ளும் குழந்தைகளில்



சிலர், நடக்க ஆரம்பித்தவுடன் மற்ற பொருட்களின் மீது கவனம் திரும்ப, இந்தப் பழக்கத்தை நிறுத்திக் கொள்கிறார்கள். பொதுவாக, அநேக குழந்தைகள் ஐந்து வயதிற்குள் இப்பழக்கத்தை விட்டு விடுகிறார்கள். ஆனால் சில குழந்தைகள் பதினைந்து வயது வரைகூட இப்பழக்கத்திலிருந்து விடுபட முடியாமல் இருக்கிறார்கள். தான் செய்வது தவறு என்பது தெரிந்து, மறைவான இடத்திற்குச் சென்று சிறிது நேரம் வாயில் விரலைப் போட்டுக் கொண்டு, தங்கள் டென்ஷன் குறைந்ததாகத் தெரிந்தால், விரலை எடுத்து விட்டு வெளியில் வருகிறார்கள்.

## இதனால் என்ன பாதிப்பு?

ஒரு வயதிற்குள், விரல் போட்டுக் கொள்வதிலிருந்து மீண்டு விட்டால் எந்த வித பாதிப்பும் கிடையாது. ஆனால் அதற்கு மேலும் தொடர்ந்தால் -

1. உறிஞ்சும் திருப்திக்காக ஆரம்பித்து, அதே பழக்கமாகி, அடிமையாகிறார்கள் (addiction).

2. குழந்தைகளின் கவனம் முழுவதும் 'விரல் சூப்புவதிலேயே' இருந்தால், மற்ற விஷயங்களைத் தெரிந்து கொள்வதில் உள்ள ஆர்வம் குறைந்து விடுகிறது. சாப்பாட்டில் கூட ஆர்வம் இருக்காது. இதனால் மனவளர்ச்சி, உடல் வளர்ச்சி இரண்டுமே பாதிக்கப்படுகிறது.

3. ஆறு வயதிற்கு மேல் பால் பற்கள் விழுந்து, நிரந்தரமான பற்கள் முளைக்க ஆரம்பிக்கும் சமயத்தில் விரல் போட்டுக் கொள்ளுவதால், முன் வெட்டுப் பற்கள் வளைந்து, வாய்க்கு வெளியே துருத்திக் கொள்கின்றன (Maloclusion).

4. வாயைத் திறந்து கொண்டு தூங்கும் பழக்கம் ஏற்படுகிறது.

5. கையில் இருக்கும் தொற்று, வாய்க்குள் சென்று உடல் உபாதையை உண்டாக்குகிறது.

6. விரல்களில் காய்ப்பு ஏற்படுவதோடு சுருங்கியும் போவதால், பார்க்க அருவருப்பாக இருக்கும்.

7. சிலர் பெரியவர்களாகும் பொழுது இந்தப் பழக்கத்தின் காரணமாகப் புகை பிடிக்கக்கூடிய வாய்ப்பு ஏற்படுகிறது.

## உங்கள் பங்கு என்ன?

இந்தப் பழக்கத்திலிருந்து குழந்தை மீண்டு வருதலில் பெற்றோரின் பங்கு பெரிதும் அவசியம்.

1. சில குழந்தைகள் தாய்ப்பால் குடித்து முடித்த பின்னரும் கூட, பால் வராவிட்டாலும் திருப்திக்காக உறிஞ்சிக் கொண்டிருக்கும். அப்பொழுது தாய், குழந்தையை விலக்காமல் திருப்திக்காக சில நிமிடங்கள் அதன் செயலை அனுமதிக்க வேண்டும்.

2. 'விரல் போட்டுக் கொள்வதால், குழந்தை அழுது, தன்னைத் தொந்தரவு செய்வதில்லை. அதனால் வீட்டு வேலைகளை நிம்மதியாகச் செய்ய முடிகிறது' என்று நினைத்து, சில தாய்மார்கள் குழந்தைகளை விரல் போட்டுக் கொள்ள அனுமதிப்பதைத் தவிர்க்க வேண்டும்.

3. குழந்தைகளின் முன்னிலையில் கணவன், மனைவி சண்டையிடுவதைத் தவிர்க்க வேண்டும். பெற்றோர் சண்டையில் தன்னைக் கவனிக்க ஆளில்லை என நினைத்து, பாதுகாப்பிற்காக இப்பழக்கத்தைக் குழந்தை மேற்கொண்டு விடுகிறது.

4. 'குழந்தைகள் ஒரு பொருளைக் கேட்டுக் கொடுக்காமல் இருந்தால் பிடிவாதத்தினால், உடனே வாய்க்குள் விரலைக் கொண்டு போவார்கள். அதற்காக, கேட்கும் பொழுதெல்லாம் கேட்டதைக் கொடுத்தாலும் அதுவே பிடிவாதத்தை வளர்க்கும் கெட்ட பழக்கமாகி விடும். ஆகையால், அவர்களின் மனதறிந்து, மற்ற பொருட்களின் மீது அவர்களின் கவனத்தைத் திசைதிருப்ப வேண்டும். வர்ணம் பெயர்ந்து வராத, உடையாத, ஆபத்தில்லாமல் இருக்கும் பொருட்களைக் குழந்தை கேட்கும் பொழுது தாராளமாகக் கொடுக்கலாம்.

5. கணவன், மனைவி இருவரும் வேலைக்குச் செல்பவர்களாக இருந்தால், வீட்டில் நிறைய நேரத்தைக் குழந்தையுடன் செலவிடுவது மிகவும் அவசியம். அப்பொழுதுதான், குழந்தையும் பாதுகாப்பாகப் பெற்றோரின் அரவணைப்பில் இருப்பதை உணரும். பொதுவாகவே எல்லா பெற்றோர்களும் குழந்தைகளுடன் தங்களை ஐக்கியப்படுத்திக் கொண்டு மனம் திறந்து பேச வேண்டும். அவ்வாறு செய்வதால், பிற்காலத்தில் குழந்தைகள் இதைவிடக் கொடிய (போதை மருந்து போன்ற) பழக்கங்களுக்கு அடிமையாவதைத் தவிர்த்து விடலாம்.

பேட்டி : மாலதி சந்திரசேகரன்
மேலட்டை வண்ணப்படம் மற்றும்
புகைப்படங்கள் : கோபிநாத்
அட்டைப் பாப்பா : மாஸ்டர் தீரஜ்




Chaitra Leo Burnett B MP/046/93 TAM


தீபாவளி பட்ஜெட் போட்டிருக்கேன்!
இந்தியா – சிங்கப்பூர் வியாபாரத்துக்கு
640 கோடி... ஹீரானந் திட்டத்துக்கு
464 கோடி... கடல் நீரை
சுத்திகரிக்க 340 கோடி...
தென்னாட்டு நதிகளை இணைக்க
680 கோடி... புதிய கல்வித்
திட்டத்துக்கு 1200 கோடி ......
மத்திய அரசு
மாநில அரசு
பயப்படாதே!
இதெல்லாம்
பயன்படுத்தப்
போறதில்லை...
பேச்சு வார்த்தை
நடத்துவோமாம்,
சமர்த்தா வெளிய
வந்துருவியாம்...
இந்திய ராணுவம்
காஷ்மீர் பயங்கரவாதம்
தேர்தல் பிரச்சாரம்
பி.ஜே.பி.
புயல் வேகத்துல புறப்பட்டீட்டே, சரி...
ஆனா, ஈசாப் கதைப்படி
ஆமைதான் ஜெயிக்கணும்,
ஞாபகம்
வச்சிக்க...
காங்கிரஸ்




கல்கி

1993
நவம்பர் 7
மலர் : 52
இதழ் : 15
ஸ்ரீமுக
ஐப்பசி 22




தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.

# பயங்கரவாதத்துக்குப் பணிந்து போவதா?

காஷ்மீர் பயங்கரவாதிகளின் ஆக்கிரமிப்புக்கும் நமது ராணுவத்தின் முற்றுகைக்கும் ஆளாகியுள்ள ஹஜ்ரத்பாலுக்குத் தொன்மையான சரித்திரம் உண்டு. நபிகள் நாயகத்தின் புனித முடியொன்றை பாதுகாத்து வந்த ஒரு ஷேக், மெக்கா மன்னரிடம் பகைமை கொண்டதால் இந்தியாவுக்கு வர, அவரிடமிருந்து ஒரு காஷ்மீரி அதைப் பெரும் பொருள் தந்து பெற்றார். அவுரங்கசீப் அதை அவரிடமிருந்து பறித்து அஜ்மீர் தர்க்காவில் வைக்க முற்பட, மன்னன் கனவில் நபிகள் தோன்றி, ''காஷ்மீர் போக விரும்பும் என்னை ஏன் தடுக்கிறாய்?'' என்று கேட்க, அவுரங்கசீப் ராஜமரியாதையுடன் காஷ்மீருக்கே புனித முடியை அனுப்பி விட, அது அங்கே ஸ்தாபிதமாயிற்று. ஷேக் அப்துல்லா இந்தக் கட்டடத்தைப் பழுதுபார்த்துப் புதுப்பித்துத் தந்திருக்கிறார். 1963ல் ஒருமுறை இந்தப் புனித முடி காணாமல் போய் பெரும் பரபரப்பை ஏற்படுத்தி விட்டு, இரண்டு மாதம் கழித்துப் போன சுவடு தெரியாமல் திரும்பி அமைதி காத்தது.

இத்தகைய தொன்மைவாய்ந்த புனிதத் தலத்தைத்தான் பயங்கரவாதிகள் தற்போது ஆக்கிரமித்துக் கொண்டு மாசுபடுத்தி வருகின்றனர். உள்ளேயிருக்கும் பிணைக் கைதிகளுக்கும், புனித முடிக்கும், தலத்துக்கும் சேதம் ஏதும் ஏற்பட்டு விடக் கூடாதே என்பதால் ராணுவம் தயங்குகிறது. முற்றுகையிட்டு, உணவும் நீரும் மின் சப்ளையும் மறுத்து, பயங்கரவாதிகளை வெளியேற்றி விட முயற்சி நடக்கிறது. பேச்சு வார்த்தைகளும் ஆரம்பமாகியுள்ளன.

நாம் பேச்சு வார்த்தைகளின் விரோதிகள் அல்ல. ஆனால் யாரிடம் பேச்சு வார்த்தை நடத்துவது என்று ஒரு தர நிர்ணயம் வேண்டாமா? பிணைக் கைதிகளை வைத்துக் கொண்டு, புனித இடத்தை ஆக்கிரமித்துக் கொண்டு அதை மாசுபடுத்துகிறவர்களிடமா பேச்சு வார்த்தை? 'பிளாக்மெயில்' செய்து அச்சுறுத்துகிறவர்களிடம் எந்த அடிப்படையில் பேச முடியும்? பேச்சு வார்த்தை வெற்றி பெறுவதாகவே வைத்துக் கொண்டால், இருதரப்பும் விட்டுக் கொடுக்கிறது என்பதுதான் அதன் அர்த்தமாக இருக்கும். ஏதோ ஒரு சலுகை நாம் காட்ட வேண்டியதாகத்தான் ஆகும். இது, இதே போன்ற அக்கிரமத்தில் மீண்டும் சில பயங்கரவாதிகள் ஈடுபட ஊக்கமளித்ததாகவே முடியும். எனவே சரணடைய 24 மணி நேர அவகாசம் தந்து விட்டு, 'விளையக் கூடிய சேதத்துக்குப் பாகிஸ்தானும், அவர்களால் தூண்டி விடப்பட்ட பயங்கரவாதிகளும்தான் பொறுப்பு' என்று அறிவித்து விட்டு, ராணுவம் உள்ளே புகுந்திருக்க வேண்டும். 'அப்படியானால் பிணைக் கைதிகளின் கதி என்ன?' என்று கேட்கலாம். மீட்பு முயற்சியில் ஒருவேளை நம் ராணுவம் தோற்றுப் போகலாம்தான். ஆனால் இப்போது மட்டுமென்ன? முற்றுகையை விலக்கக் கோரியும் ஹஜ்ரத்பாலுக்குள் நுழைய அனுமதி வேண்டியும் திரண்டு வந்த ஆர்ப்பாட்டக்காரர்கள் மீது ராணுவம் துப்பாக்கிப் பிரயோகம் செய்ய, பலரும் உயிரிழக்கத்தானே செய்தார்கள்? 'மரணம் சம்பவிக்கவில்லை' என்று ராணுவம் மறுத்தபோதிலும் நாளிதழ்கள் வேறு கதைதானே கூறுகின்றன!

பயங்கரவாதிகளைத் தூண்டி விடும் பாக். அரசுடன் உயர் மட்டத்தில் பேச்சு வார்த்தைகள் நடத்தலாம்; பயங்கரவாதிகளுடன் அல்ல. இவர்களிடம் தாழ்ந்து போவது இவர்களிடம் மட்டுமின்றி, பாக். தலைமையிலும் ஆணவத்தை வளர்க்கும். பிறகு அங்கேயும் பேச்சு வார்த்தைகள் கடினமாகிப் போகும்; முன்னேற்றமிராது.

பாகிஸ்தானில் ஆட்சி மாற்றம் நடந்திருப்பது ஒரு நம்பிக்கை ஒளிக்கீற்று. ''இந்திய ராணுவம் வெளியேற வேண்டும்; காஷ்மீரில் கருத்துக் கணிப்பு நடக்க வேண்டும்'' என்றெல்லாம் பேனசிர் வீம்பாகப் பேசியிருந்தாலும், ''பேச்சு வார்த்தைக்குத் தயார்'' என்றும் கூறியிருப்பது யதார்த்தப் போக்கு. பிரதமர் சார்பில் காமன்வெல்த் மாநாட்டுக்குச் சென்றுள்ள மன்மோகன் சிங், இந்த யதார்த்த ஒளிக் கீற்றைப் பயன்படுத்திக் கொண்டு அமைதிப் பாதை வகுக்க முயற்சி எடுத்திருக்கிறார். இந்த அமைதிப்பாதைதான் இரு நாடுகளுக்குமே முன்னேற்றப் பாதை என்பதை நிதி அமைச்சரை விட நன்றாக உணர்ந்தவர் வேறு யாரும் இருக்க முடியாது. பேனசிரையும் உணரச் செய்து விட்டால்... பிறகென்ன, அமைதிக்கான அடுத்த நோபெல் பரிசு இவ்விருவருக்கும்தான்!

# பிரதமரின் முகமே அத்தாட்சி!

◆ தூங்கும் காங்கிரஸைத் தட்டியெழுப்ப எழுதிய தலையங்கம், செவிடன் காதில் ஊதிய சங்குதான்! சுதந்திரம் பெறுவதற்கு முன்னரும், பெற்ற பின் சில ஆண்டுகளும் நாட்டின் நலனில், நல்வாழ்வில் அக்கறை கொண்டிருந்த ஸ்தாபனம், தற்போது தானது சொந்த நலனை மட்டுமே எண்ணிச் செயல்படுகின்ற "தரகு முதலாளி"களின் கூடாரமாகி விட்டதனால் நாட்டின் அரசியலே ஆபாச சினிமா போல் ஆகி விட்டது. திருத்துவது, மக்கள் கையில்தான் இருக்கிறது.

கோயமுத்தூர், தி. ரங்கசாமி.

◆ 'தேர்தல் வருகிறது; காங்கிரஸ் தூங்குகிறது' தலையங்கம் கண்டேன். ஒரு சந்தேகம் - தேர்தல் நேரத்தில் மட்டுமா காங்கிரஸ் கட்சி தூங்குகிறது?

சிதம்பரம், என். ஆர். பாஸ்கரன்.

◆ நரசிம்மராவ் ஆட்சியில் நாடு இன்பத்தில் மிதக்கிறது என்ற வரி காதில் பூவல்ல; பூமாலை! நாடு சோகக் கடலில் மூழ்கிக் கொண்டிருக்கிறது என்பதுதான் உண்மை. அதற்கு நம் பிரதமரின் முகமே அத்தாட்சி!

மங்கைநல்லூர், ஆர். செல்வராணி.

◆ தன்னை ஒரு கட்டுக்கோப்பான கட்சி என்று மார்தட்டிக் கொண்டிருந்த தி.மு.க., சமீப காலங்களில் தள்ளாடுவதை நினைக்கும் போது வேதனைதான் மிஞ்சுகிறது. தங்களின் ஆதாயத்துக்காகக் கலைஞரையும், வை.கோ. வையும் தூண்டி விட்டுக் கொண்டிருக்கும் தனிப்பட்ட நபர்களை இருவருமே விலக்கி விட்டு நேரிடையாக, சுமுகமாகப் பேசி, பிரச்னையைத் தீர்த்துக் கொண்டால் கட்சிக்கு மேலும் பலத்தை அதிகப்படுத்தலாம். அதை விட்டு, இருவருமே தனித்தனியாக அறிக்கைப் போர் நடத்திக் கொண்டிருப்பது தி.மு.க.வை மேலும் பலவீனப்படுத்தி விடும். இந்த பலவீனமே மற்றக் கட்சிகளைப் பலமாக்கி விடும்.

வலங்கைமான், பி. நூர்தீன்.

◆ 'தீபாவளிப் புடைவை - என்ன புதுமை' என்ற உங்கள் விலாவாரியான கட்டுரை, தந்தைக் குலங்கள் மத்தியில் சலசலப்பையும், தாய்க் குலங்களிடையே கலகலப்பையும் ஏற்படுத்தியிருக்கும்.

மணக்காடு, சி. ரஜினி அருள்.

◆ கவர் ஸ்டோரி கண்டேன். இல்லங்களில் குடியிருக்கும் அரசிகளை உசுப்பேற்றி விட்டு விட்டீர்கள் என்பது கசப்பான உண்மை! கடலையைத் தோலுரிப்பது போல 'கல்கி'யைக் கண்டதிலிருந்து என்னைத் தோலுரிக்கிறார்கள் வீட்டு அம்மணிகள்!

மேல்பட்டி, எஸ். மாறன்.

◆ "சிறுநீரகத்தில் கல்லா? - 40 நிமிடத்தில் நிவாரணம்" என்ற கட்டுரை விஞ்ஞானத்தின் ஆக்கபூர்வமான முன்னேற்றத்தைச் சுட்டிக்காட்டி வியக்க வைத்தது. தன்னுடைய யோசனையை அலட்சியப்படுத்தினாலும் துவண்டு விடாமல் மக்கள் சேவை புரிய "மொடிஸ்டோன் - 300" ஐ இறக்குமதி செய்த டாக்டர் சின்னச்சாமி உண்மையிலேயே பாராட்டுக்குரியவர்.

வேலூர் - 7, பா. வை. சுவாமிநாதன்.

◆ குமரி முனையில் திருவள்ளுவர் சிலை அமைக்கப்படும் செய்தியை ஏற்கெனவே படித்த ஞாபகம். மேற்கொண்டு அதைப் பற்றிச் செய்தி ஏதும் வராத நேரத்தில் அந்தப் பணி நிறைவேற்றப்படுகிறது என்ற செய்தியோடு அதைப் பற்றிய சுவாரசியமான தகவல்களைத் தாங்கள் கொடுத்ததற்கு நன்றி.

சென்னை - 38, பி. ஸ்ரீதர்.

◆ 'வேதவல்லி' சிறுகதையில், கோணலாகிப் போன வாழ்க்கைப் பாதைகளைச் செப்பனிட முடியாமல், பெண்கள் பேதைத்தனத்துடன் தற்கொலை முடிவுக்குத்தான் செல்வார்கள் என்பதாகக் கதாசிரியர் சுட்டிக்காட்டியது இக் காலத்திற்கு ஏற்புடையதாகத் தெரியவில்லை!

சேலம், மு. இரவிச்சந்திரன்.

◆ பாரதிபாலனின் 'வேதவல்லி' சிறுகதையில், ஆரம்பத்தில் ஆழ்ந்த மனம் கடைசிவரை மீளவே இல்லை. 'காலை, மாலை, இரவுங்கிறது சாப்பிடறதுக்கு மட்டுந்தான்னு இல்லை' என்ற வரி, ஆயிரம் அர்த்தங்களை உள்ளடக்கிய சிந்தனையூட்டும் வரி. பாராட்டுகள்!

தி. வெ. நல்லூர், வைத்யா.

◆ 'கதை கேட்' ஓர் அபூர்வமான கருக்கொண்ட கதை. ஒரே மாதிரியான கதைகளையே படித்துச் சலித்த மனதுக்கு இக் கதாசிரியர் தனித்து உயர்ந்து தெரிகிறார். பாராட்டுக்கள்!

பெங்களூர் - 78, விஜயா ராஜன்.

◆ சென்ற இதழில் கொலு பற்றி ஜூலி எழுதிய ஜோக் படித்தேன். உண்மையில் அப்படிப்பட்ட வால்-பேப்பர்கள் பலவித டிசைன்களில் கிடைக்குமானால் நவராத்திரி நேரத்தில் உபயோகப்படுத்துவதில் தவறில்லை. இடப்பற்றாக் குறையில் அவதிப்படுவோருக்கு இது வரப்பிரசாதம். மேலும் என் போன்றோர்க்கு, வெள்ளை வேஷ்டிகள் பத்திரமாகவும் இருக்கும்.

மதுரை - 6, அன்னம்.

◆ கற்பகம் வந்தாச்சு திரைப்படத்திற்கு விமரிசனம் கண்ட போதுதான், அப்படியொரு படமே வந்ததா என ஆச்சர்யப்பட்டுப் போனேன். இருந்தாலும் உங்க 'ஸ்பீடு' கொஞ்சம் அதிகந்தான்!

கோவை - 16, ராம்யா.

வட்டமேஜை

# பூ முகம்

போட்டிக் கதை - 11

"அங்கிள்"

காலை பேப்பரை புரட்டிக் கொண்டிருந்தவன், குரல் கேட்டு நிமிர்ந்தேன்.

அந்தச் சிறுமி நின்று கொண்டிருந்தாள். பத்து, பன்னிரெண்டு வயதிருக்கும்.

'என்ன' என்பது போல் புருவம் உயர்த்தினேன்.

"என் பேர் மைதிலி. நாங்க அடுத்த வீட்டுக்குப் புதுசா வந்திருக்கோம்." தயக்கம் தெரிந்தது குரலில்.

'ஓ... ஆமாம், நான் கூட இரண்டொரு முறை பார்த்திருக்கிறேன்' இரண்டாம் பார்வையில் ஞாபகம் வந்தது.

"அப்படியா, என்ன படிக்கிறே?"

"லெவன்த் ஸ்டாண்டர்ட் அங்கிள்."

மைதிலி இரட்டை ஜடையில் ஒன்றை முன்னால் தூக்கிப் போட்டு, பின்னல் நுனியைத் திருகியபடி சொன்னாள்.

"ம்... என் மகள் தீபிகா இருந்திருந்தால் அவளும் கூட ஏழாம் வகுப்புதான் படிப்பாள்..." பெருமூச்செறிந்தேன்.

தீபிகா மறைந்த இரண்டு வருஷங்களாய் என் மனைவி வெளியில் வருவதில்லை. அக்கம் பக்கத்து மனிதர்களிடம் பேசும் ஆர்வம் கூட அவளிடம் கிடையாது. பிடிப்பே விட்டுப் போயிற்று. நோயாளி போல் படுத்த படுக்கை. காட்டு நிழலாய்க் கவிந்த சோகம்.

"என்ன விஷயம் மைதிலி, ஆண்ட்டியைப் பார்க்கணுமா?"

"இல்லை அங்கிள். உங்களைத் தான்... உங்க தோட்டத்துல ரோஸ் பூத்திருக்கு, பார்த்தேன்..."

நான் சன்னல் பக்கம் திரும்பினேன். ஆமாம், பூத்துத்தான் இருந்தது. நேற்று வரை இல்லை. இன்று, முதல் பூ!

"எனக்கு ரோஸ்னா ரொம்பப் பிடிக்கும் அங்கிள். தருவீங்களா?" மைதிலியின் கண்களில் - வார்த்தையில் ஆர்வம், எதிர்பார்ப்பு.

"முடியாதும்மா."

என் மறுப்பு அவளுக்கு முகத்தில் அறைந்தாற்போல் இருந்திருக்க வேண்டும். என்னை மிரட்சியுடன் பார்த்தாள். விறுவிறுவென்று படி இறங்கிப் போய் விட்டாள்.

போகட்டுமே, நான் எப்படிக் கொடுப்பேன்? எனக்குள் முணுமுணுத்துக் கொண்டு மீண்டும் ரோஜாச் செடியைப் பார்த்தேன்.

ஒரே பூதான். பெரிதாய், அழகாய் என்னைப் பார்த்துச் சிரித்தது. கடையில் அம்பாரமாய்க் கொட்டி வைத்திருப்பார்கள். என்ன இருந்தாலும், இந்த ஒரு பூவின் சந்தோஷம் அதில் வருமா? நம் வீட்டுத் தோட்டத்தில் பூத்தது என்ற பெருமிதத்தில் சொல்லவில்லை.

அந்த ரோஜாச் செடி... என் மகள் தீபிகாவின் கனவு!

நான் இருபது வருஷம் போல் நாக்பூரில் வேலை பார்த்து விட்டு, நாலு வருஷம் முந்திதான் சென்னைக்கு மாற்றிக் கொண்டு வந்தேன். கண்ணுக்கு அழகாய் மனைவி, இரண்டு பையன்கள், கடைக்குட்டியாய் ஒரு பெண். சொந்த வீடு, மனத்துக்கு நிறைவான குடும்பம்.

வானத்து தேவதையே மண்ணில் இறங்கி வந்தது போல் அருமை மகள்



# தேவநாதன்

தீபிகா. எட்டு வயதுப் பெண். அப்போது தேர்ட் ஸ்டாண்டர்டு படித்துக் கொண்டிருந்தாள். படிப்பைப் போலவே விளையாட்டிலும் படுசுட்டி.

**வா**சலில் பேப்பர்காரன் விட்டெறி யும் பேப்பரை எடுத்து அழகாக மடித்து டீப் பாய் மீது வைப்பாள்.

"அம்மா, மணி ஆறு. என்ன பண்றே, நீ? காப்பி போடறயா, இல்லே நான் போடட்டுமா?" என் மனைவியை மிரட்டு வாள்.

என் ரூமில் நுழைவாள்.

குளிருக்குப் பயந்து சால்வையை இழுத் துப் போர்த்திக் கொண்டு கிடப்பேன். படீ ரென்று சன்னல் கதவுகளைத் திறந்து விடு வாள். சிலீர்க் காற்று என்னைச் சீண்டும். எனக்கு எரிச்சலாய் வரும். என்னைத் தூக்கத் திலிருந்து எழுப்பி விடும் யுக்தி! அதற்கும் நான் மசியவில்லை என்றால்...

"டாடி குட்மார்னிங்!" உரத்துக் குரல் கொடுப்பாள்.

"மார்னிங்" நான் சால்வையை இழுத்து மூடிக் கொள்வேன். அல்லது, புரண்டு படுத்து விடுவேன்.



டேப்பில் சுப்ரபாதம் காஸட்டைச் சுழல விடு வாள்.

"மணி ஆறு. எழுந்துக்கங்க" கட்டளை இடுவது போல் இருக்கும். அதென்னமோ தினமும் காலை ஆறுக்கெல்லாம் எல்லோ ரையும் எழுப்பி விட்டுத்தான் மறுவேலை பார்ப்பாள். விதிவிலக்கு ஞாயிறு மட்டும்.

"டாடி காப்பி ரெடி. குடிச்சிட்டு வாக் கிங் போயிட்டு வாங்க. குளிச்சு, சாப்ட்டு ஆபீஸ் கிளம்ப டயம் சரியாயிருக்கும். இன் னைக்கு ஒண்ணும் சண்டே இல்லை. எழுந் துக்கங்க." என் கடமைகளை நினைவூட்டு வாள். என் மனைவி கூட அப்படி என்னை அதட்டியதில்லை. தீபிகா அதட்டுவாள். நான் எழுந்த பிறகுதான் ரூமை விட்டு நகர் வாள்.

பக்கத்து ரூமில் தூங்கும் அண்ணன் களையும் விட்டு வைக்க மாட்டாள்.

"பாலு அண்ணா... கிரவுண்ட் போகலை? உன்னோட ஃப்ரண்ட்ஸ்லாம் முன்னாடியே புறப்பட்டு போயிட்டா..." பெரிய அண்ணன் பாலு, கபில்தேவ் மாதிரி வர வேண்டும் என்கிற கனவு அவளுக்கு. கிரிக்கெட் பிராக்டிஸ் தவறக் கூடாது என்ப தில் குறியாயிருப்பாள்.

"நீயும் ஒருநாள் டெஸ்ட் மாட்ச் விளை யாடணும். நாங்கல்லாம் உன்னையும் டீ.வி.ல பார்க்கணும்!" என்பாள்.

"சேகர், இப்படித் தூங்கினா, பரீட் சைல நூற்றுக்கு இருநூறு மார்க் வாங்கலாம். ம்... எழுந்திரு... படி..." பெரிய மனுஷி போல் இடுப்பில் கை வைத்துக் கொண்டு உத்தரவு போடுவாள்.

வாசலில் பிச்சைக்காரன் குரல் கேட் கும். "போ... போ. வேற வேலையே இல்லை!" என்று என் மனைவி எரிந்து விழுவாள்.

"பாவம்மா. வயசானவர்... நாலு வீட்ல யும் உன்னை மாதிரி விரட்டியடிச்சா என்ன பண்ணுவார்?" குடுகுடுவென்று கிச்சனுக்கு ஓடி தோசையோ, பழைய சோறோ எடுத்து வந்து போடுவாள்.

"இந்த சரசுவைப் பாரேன். இப்படியா கிழிசலை மாட்டிண்டு வந்து நிற்கும்?" வேலைக்காரியின் மகளுக்குத் தன்னுடைய சுமாரான மிடி, பாவாடை எது கைக்குக் கிடைக்குமோ தூக்கிக் கொடுத்து விடுவாள்.

**இ**ப்படி அல்பாயுசில் முடிவாள் என்பதற்காகத்தான் கடவுள் அவளுக்கு அப் படி ஒரு புத்தி தீட்சண்யத்தையும், நெஞ்சில் ஈரத்தையும் கொடுத்திருந்தாரோ, என் னமோ?

மொழுமொழுவென்று மெழுகு பொம்மை போல் அழகாயிருந்த என் மகள்

கொஞ்ச நாளாகவே வெளிறி, மெலிய ஆரம்பித்திருந்தாள்.

''என்னடி! ஒரு இட்லிதான் சாப்பிடு வியா? தட்டில் வச்சது அப்படியே இருக்கு?'' கோபிப்பாள் என் மனைவி.

''தெரியலைம்மா. என்னால் சாப்பிட முடியலே!'' எழுந்து விடுவாள்.

சன்னல் ஓரம் நாற்காலியில் சாய்ந்தபடி தொலைவுகளை வெறிப்பாள்.

''என்னம்மா ஆச்சு, ஏன் ஒரு மாதிரி இருக்கே?'' கவலையோடு கேட்பேன்.

''தலையை வலிக்குது டாடி. ஜுரம் வர்ற மாதிரி ஃபீலிங்.''

ஜுரத்துக்கு மாத்திரை கொடுப்பேன். தலை பாரம் குறையவில்லை என்பாள்.

''அடிக்கடி இப்படி வருதாம்மா?''

''ஆமா, டாடி.''

''அப்போ கண்ணாடி போடணுமோ'' கண் டாக்டரிடம் அழைத்துப் போவேன்.

சீக்கிரமே எடை குறைந்து, உருமாறிப் போன தீபிகாவைப் பரிசோதித்த டாக்டர் வருத்தம் தொனித்தார். ''ப்ளட் கான்ஸர்... ரொம்ப அட்வான்ஸ்ட் ஸ்டேஜ்...''

அதிர்ந்து போனோம்.

''எவ்வளவு செலவானாலும் பரவா யில்லை. எங்க தீபிகாவைக் காப்பாற்றிக் கொடுங்க டாக்டர்.''

புலம்பினோம். ஆலயங்களில் மன்றாடி னோம்.

''டாடி, நான் செத்திடுவேன்னு பயமா?'' கலகலவென்று சிரிப்பாள் தீபிகா. அதில் மறைந்து கிடக்கும் சோகம் அரிதாய்ப் புலப்படும்.

''உடம்புதான் முடியலையே, ஸ்கூலுக்குப் போகணுமா?'' புத்தகப் பையு டன் புறப்படும் மகளை தடுக்கப் பார்த்தாள் என் மனைவி.

''என்னால் முடியும். போய் வர் றேன்மா.''

மாலை வீடு திரும்பும் போது கையில் ஒரு குச்சி. பச்சையாயிருந்தது. காம்பவுண்ட் சுவரோரம் மண்ணைத் தோண்டி அந்தக் குச்சியைச் செருகினாள். சுற்றி வர கொத்தி விட்டாள்.

''என்ன தீபிகா அது?''

''ரோஸ் ப்ளான்ட் டாடி. என் ஃப்ரண்ட் ஒருத்தி வீட்லருந்து வாங்கிட்டு வந்தேன்.'' செம்பு செம்பாகத் தண்ணீர் கொண்டு வந்து ஊற்றினாள்.

செடி... இலைகள் உதிர்ந்து மொட்டைக் கொம்பாய் நின்றிருந்தது.

தீபிகா சளைக்கவில்லை. தினமும் இரண்டு வேளை தவறாமல் தண்ணீர் ஊற்றி னாள். பத்து இருபது நாளில் கணுக்கள் தோறும் நம்பிக்கை அரும்பு கட்டியது.

''டாடி, என்னோட ரோஸ் பிழைச் சிட்டது. சீக்கிரமே பூக்கும்! உற்சாகமாய்க் கூவினாள். அவள் முகம் பூவாய் மலர்ந்திருந் தது.

ரோஜாச் செடி பிழைத்துக் கொண்டது. தீபிகாதான் பிழைக்கவில்லை.

ஒரு அந்திப் பொழுதில் எங்கள் அன்பு மகள் எங்களை விட்டுப் பிரிந்தாள்.

கடவுள் இரக்கமற்றவர். இல்லையென் றால் அந்த அழகிய பூவைப் பிய்த்தெறிய அவருக்கு எப்படி மனம் வந்திருக்கும்?

வீடு இருண்டு போனது. வீட்டின் மொத்த இயக்கமும் ஸ்தம்பித்து விட்டது.

பையன்கள் உரத்துப் பேசுவதில்லை. முன் போல் அவர்களுக்குள் வம்பு பேசி, ரகளை செய்வதில்லை. ரொம்பவும் சன்னக் குரலில் பேசிக் கொண்டார்கள். என் மனைவிதான் வெகுவாக பாதிக்கப்பட் டாள். அவளை நெருங்கவே எனக்கு அச்ச மாயிருந்தது. நண்பர்கள் உறவினர்கள்

# பெண்களுக்கு முழுசுதந்திரம் ப்ரீதியினாலே



எல்லா விதமான சமையலுக்கும், கடினமானதையும் அரைக்கவோ, பொடி செய்யவோ, அதி நவீன **550 வாட் மோட்டர், 3 ஸ்டெயன்லஸ் ஸ்டீல் ஜாடிகள்** கொண்டது ப்ரீதி. தோசை மாவு முதல் கொத்துக்கறி வரை அனைத்துக்கும் சிறந்தது ப்ரீதி.

சமையல் தவிர மற்ற வேலைகளையும் கவனிக்க நேரமளிக்கிறது ப்ரீதி.




**550 வாட் 30 நிமிடம்**

**Preethi XL7**

இல்லத்தரசியின் இனிய தோழி

**2 வருட உத்திரவாதம் ஆயுட்கால இலவச சர்வீஸ்**

TAS Vision ● 232

# நாகர்கோயில்-கன்னியாகுமரி வாசகர்களே!

நாகர்கோயில் - கன்னியாகுமரி வாசகர்களே, கும்பகோணம் மற்றும் கரூர் வாசகர்களைப் போலவே உங்கள் ஊர்ச் சிறப்பிதழ் ஒன்று தயாரிக்கும் வாய்ப்பு உங்களுக்கும் தயாராய் இருக்கிறது.

அந்த நாகர்கோயில் - கன்னியாகுமரி சிறப்பிதழுக்குச் சிறப்புச் சேர்க்கும் விதமாக என்னென்ன விஷயங்கள் இடம் பெற வேண்டுமென்று விரும்புகிறீர்களோ அவை பற்றி எங்களுக்கு எழுதியனுப்புங்கள்.

ஊரின் தொழில் வளர்ச்சி, சுற்றுலா வளர்ச்சி, தனி மனிதர்கள், நிறுவனங்கள் அல்லது அமைப்புகளின் சிறப்புகள், அரசியல், ஊரின் பாரம்பரியச் சிறப்புகள் மற்றும் நவீனத்தின் தாக்கம், இவற்றோடு சிறுகதை, துணுக்கு என்று எதுவேண்டுமானாலும் எங்களுக்கு எழுதியனுப்பலாம்.

நீங்கள் எழுதும் விஷயங்களின் அடிப்படையில், நாங்களும் நேரில் வந்து பார்த்து விட்டுப் பிரசுரம் செய்கிறோம்.

*நாகர்கோயில் - கன்னியாகுமரி பற்றிய உங்கள் கடிதங்கள் வந்து சேர வேண்டிய கடைசி தேதி : 10.11.93.*

உடனடியாக எழுதியனுப்புங்கள்.

– ஆசிரியர்.

---

என்று யார் யாரோ வந்து தேறுதல் சொன்னார்கள். நான் தேக்கத்திலிருந்து சகஜத்துக்கு வர இருபது நாள் பிடித்தது.

அன்று சன்னல் ஓரம் நின்ற போது தற்செயலாகப் பார்த்தேன். என் மகள் வைத்த ரோஜாச் செடி வாடி வதங்கி... பதற்றத்துடன் ஓடிப் போய்க் கிட்டத்தில் பார்த்தேன்.

நீர் வறட்சியில் காய்ந்து விட்டிருக்கிறது!

'என்னை மறந்திட்டீங்களா டாடி?' தீபிகா கேட்பது போல் இருந்தது. பெரிய குற்றம் செய்தவனாய் உணர்ந்தேன். பக்கெட் நிறைய தண்ணீர் கொண்டு வந்து ஊற்றினேன்.

இரண்டொரு நாளில் செடி புத்துயிர் பெற்றது. தரையைக் கொத்தி, பழுப்புகள் அகற்றி, பக்கபலமாய் ஒரு கம்பு நட்டுப் பிணைத்தேன். செடி நிமிர்ந்து, உரம்பெற்று வளர ஆரம்பித்தது.

''டாடி, குட்மார்னிங்.''

செடி பேசுமா? என் மகள்தான் பேசுகிறாளா? நான் பிரமையில் நின்றேன். பார்க்கிறவர் கண்ணுக்கு பைத்தியக்காரனாய்த் தெரிந்திருப்பேன்.

ரோஜாச் செடி வளர்ந்து, சின்னதாய்க் கிளை விட்டு, நிறைய தழைத்து...

ஓ... இன்று பூக்கும் விட்டது!

''தீபிகா, ரோஜா பூத்திருக்க...'' நான் வாய் விட்டுச் சொன்னேன்.

''என்ன டாடி. எனக்குத் தெரியாமலா... நானல்லவோ புஷ்பிக்கிறேன்?'' எங்கோ தொலைவில் தீபிகாவின் குரல் கேட்டது.

பக்கத்து வீட்டுப் பெண் ஸ்கூலுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தாள்.

சட்டென்று என் நெஞ்சை எதுவோ உகப்பியது.

ரோஜாச் செடியில் மகளின் உருவத்தைப் பார்த்த நான், அவளது உள்ளத்தை மட்டும் பார்க்கத் தவறி விட்டேனோ?

''மைதிலி!''

எங்கள் வீட்டைக் கடந்து கொண்டிருந்த பக்கத்து வீட்டுப் பெண்ணை அழைத்தேன்.

''இந்தா, நீ கேட்ட பூ.''

அந்த ஒற்றை ரோஜாவைப் பறித்து, அவளிடம் நீட்டினேன். மைதிலியின் கண்களில் அதே மிரட்சி. நம்ப முடியாமல் விழித்தாள். கை நீட்டி வாங்கத் தயங்கினாள்.

''வாங்கிக்கோம்மா. நீ பூவைக் கேட்டப்போ, நான் ஏதோ நினைவா இருந்திட்டேன். ஸாரி...'' மனப்பூர்வமாய் வருத்தம் தெரிவித்தேன்.

''தாங்க்யூ அங்கிள்'' மைதிலி பூவை வாங்கி, பின்னலில் செருகிக் கொண்டு நடந்தாள்.

நான் கேட்டருகில் நின்று அவள் தெருக் கோடியைக் கடக்கும் வரை பார்த்துக் கொண்டே இருந்தேன்.

என் மகள்தான் போவது போலிருந்தது.



# ஜலஹ இந்தியா

தீவிரவாத, தேசத்துரோகிகள் பற்றிய கதை - காஷ்மீர் கலவரத்தில் ஆரம்பித்து, ராஜஸ்தான் பாலைவனத்துக்கும், ஜோத்பூர் மாளிகைகளுக்கும், டெல்லிச் சாலைகளுக்கும் டைவ் அடித்து, மறுபடி இமயமலைப் பள்ளத்தாக்குகளில் வீழ்ந்து சாகிறது.

அநேக அநேக அபத்த சம்பவக் கோர்வைகளுடன் சினிமாஸ்கோப் 'ஆக்ஷா'.

காஷ்மீர் தீவிரவாதிகளை ஒடுக்க, தமிழ் நாட்டு மிலிட்டெரி ஆபீஸர் போகிறார். அவரோடு பேசுவதற்கென்றே அத்தனை ராணுவர்களும் '30 நாட்களில் தமிழ்' படித்தார்களோ என்னவோ. அது தேவலை; மிலிட்டெரி டாக்டரும் தமிழ். எனவே அவர் பெண்ணும் தமிழ். தீவிரவாதி குரூப்பிலும் ஒரு தமிழர். டில்லி அமைச்சரும் தமிழ். இன்னும் பட்டியல் போடலாம். தமிழை தேசிய மொழி ஆக்குவதில் பவித்ரன் அபார வெற்றி பெற்றிருக்கிறார். இதற்காக ஏதாவது ஒரு அறக்கட்டளை விருது அவருக்குத் தரலாம்; பாதகமில்லை.

அடிக்கல் இப்படியென்றால், கட்டடம் இதைவிடப் பிரமாதம்.

காஷ்மீர் தீவிரவாதியாக வருபவன் சாதாரணன் அல்ல! திரிலோக சஞ்சாரி. டைரக்டர் ராஜஸ்தானில் அபாரமான லொக்கேஷன்கள் பல பார்த்து வைத்திருக்கிறார். அவரை எத்தனை நாள்தான் காஷ்மீர் குளிரிலேயே உட்கார்த்தி வைப்பது? எனவே ஹீரோவுக்கும் அழைப்பு விடுத்து விட்டு, தார் பாலைவனத்துக்குக் கொஞ்ச நேரம் டிரான்ஸ்ஃபர் வாங்கிக் கொண்டு போய் விடுகிறான். அங்கும் அதிக வேலை இல்லை. எனவே ஜோத்பூர் புராதனக் கோட்டைகள். அங்கும் ஒரு தமிழ்க் க(கொ)லை விழா! தமிழர் 'கலைகள்' அங்கே பிழிந்து பிழிந்து தரப்படுகின்றன! ஆஹா, என்ன ஒரு நடனம்!

படம் முழுக்க பாம்களும் பீரங்கிகளும் மட்டுமே முழங்குவதால் செந்தமிழ்ப் பேச்சுக்கான வாய்ப்பு மிகக் குறைவு. அந்தக் குறையைப் போக்க ப்ரியா அரோரா. (அரோகரா!)

செண்டிமெண்ட் வேண்டாமா? செண்பகம்! நமது நாட்டுக்காக இந்தப்படத்தில் அவர் செய்கிற தியாகத்திற்கு பத்மஸ்ரீ, பத்ம பூஷன், பத்ம விபூஷன் சகலத்திலும் ஒரு ஒருடஜன் அவசியம் கொடுத்தாக வேண் டும்.

அப்புறம் அசோக் குமாரின் கேமரா. ரத்தக் களறியின் மேல் ஓடவிட்ட லென்ஸை பெட்ரோல் வாஷுக்கு அனுப்பினால் தான் அடுத்த படத்துக்கு உபயோகமாகும்!

டைட்டிலை 'தேசிய'மாக வைத்து விட்டு சும்மா இருந்து விடலாமா? அவ்வப்போது சாரே ஜஹான் ஸே அச்சா, கொடி வணக்கம், தேசபக்தி வீர உரை இத்யாதி.

இங்ஙனம் தமிழர் பண்பாடு, இந்தியப் பண்பாடு, தேசப்பற்று போன்ற உயரிய விஷயங்களைக் கலந்தடித்து ஆம்லெட் போட்டிருக்கிறார் பவித்ரன்.

அடுத்த வேளை உணவு, தேசியம், அழகுணர்ச்சி, மகிழ்ச்சி, கலைரசனை இதெல்லாம் விருப்பமில்லாதவர்கள் அவசியம் இப்படம் பார்த்தாக வேண்டும்.

- ஆர்.பி.ஆர்.




## 16. தீக்ஷிதர் சபதம்

நல்லான் எதிர் பார்த்தது வீண் போகவில்லை. மறு நாள் காலையில் சுமார் பத்து மணிக்கு, கொஞ்சம் தூற்றல் நின்று வானம் வெளி வாங்கியிருந்தபோது, வம்பும் தும்பும் கும்பலாகச் சேர்ந்து சம்பு சாஸ்திரியின் வீட்டு வாசலைத் தேடிக் கொண்டு வந்தன. சங்கரநாராயண தீக்ஷிதரை முன் விட்டுக் கொண்டு முத்துசாமி அய்யர், சாமாவய்யர், ரமணி அய்யர், பஞ்சுவய்யர், ராமய்யா வாத்தியார், பென்ஷன்ஸப் ரிஜிஸ்ட்ரார் சீனிவாசன் அய்யங்கார், பஞ்சாங்கம் பசுபதி ஜோசியர், குமாரசாமி குருக்கள், நாராயண கனபாடிகள், அர்ச்சகர் வரதய்யங்கார் எல்லாரும் வந்து சேர்ந்தார்கள்.

அப்போது வாசலில் நின்ற செவிட்டு வைத்தியைப் பார்த்து தீக்ஷிதர், ''அடே! உன் அத்திம்பேரைக் கூப்பிடு!'' என்று வாயாலும் கத்தி, கையாலும் ஜாடை காட்டினார். செவிட்டு வைத்தி, அவ்வளவு பேரும் கும்பலாய் வருவதைப் பார்த்து ஏற்கெனவே மிரண்டு போயிருந்தான். இப்போது, நெஞ்சு படக் படக்கென்று அடித்துக் கொள்ள உள்ளே சென்று, பூஜை அறையில் இருந்த சாஸ்திரியிடம், ''எல்லாரும் வந்திருக்கா; உங்களைக் கூப்பிடறா!'' என்றான். பிறகு சமையலறைப் பக்கம் சென்று, ''அக்கா! அக்கா! ஊரிலே எல்லாருமாகச் சேர்ந்து அத்திம்பேரை அடிக்க வரா! நாம் இங்கே இருக்க வேண்டாம், ஊருக்குப் போய்விடுவோம், வா!'' என்றான். ஆனால் மங்களம் அப்போது கொல்லையில் குளித்துக் கொண்டிருந்தபடியால், அவள் காதில் அவன் சொன்னது விழவில்லை. அதற்குப் பதிலாக அம்மியில் ஏதோ அரைத்துக் கொண்டிருந்த சாவித்திரியின் காதில் விழுந்தது. அவள் உடனே எழுந்து பரபரப்புடன் கையை அலம்பினாள்.

இதற்குள் சாஸ்திரி வாசற்பக்கம் வந்து கும்பலாக வந்திருப்பவர்களைப் பார்த்து, ''என்ன விசேஷம்? எல்லாருமா வந்திருக்கயளே! பூஜை பண்ணுகிறதற்கு உட்கார்ந்தேன்.'' என்றார்.

''உம்ம பூஜையைக் கொண்டு போய்க் குடமுருட்டி உடைப்பிலே போடுங்காணும்; உமக்குப் பூஜை வேறே வேண்டியிருக்கா, பூஜை!'' என்றார் தீக்ஷிதர்.

''என்ன தீக்ஷிதர்வாள், கோவிச்சுக்கறயளே? நான் என்ன தப்பு செய்துட்டேன், தெரியலையே?''

''என்ன தப்பு செய்துட்டீரா? நீர் ஒரு தப்பும் செய்யலைங்காணும்! தப்பு எங்க பேரிலேதான்!'' என்றார் சாமாவய்யர்.

''அவ்வளவு நெஞ்சு அழுத்தமாங்காணும் உமக்கு? அந்த நெஞ்சிலே உப்பை நெரடினா என்னன்னு கேக்கறேன்?'' என்றார் முத்துசாமி அய்யர்.

''இதென்ன பாவமான்னா இருக்கு!'' என்றார் சாஸ்திரி.

''ஆமாம், பாவந்தான்! பாவத்தையும் புண்ணியத்தையும் ரொம்பக் கண்டவரோல்லியோ நீர்?''

சம்பு சாஸ்திரி வாயை மூடிக்கொண்டு மௌனமாயிருந்தார்.

''என்னங்காணும் ஊமைக் கோட்டான் மாதிரி கம்மா இருக்கீர்? சொல்லுமேங்காணும்?''

''என்ன சொல்லச் சொல்றயள்; அதுதானே தெரியலை?''

''தெரியலையா? உமக்கு ஏன் தெரியப் போறது? பாவம்! பச்சைக் குழந்தை! வாயிலே விரலை வைச்சா கடிக்கக் கூடத் தெரியாது.''

''போறுங்காணும் வேஷம்! பதில் சொல்லுங்காணும்! தீண்டாதவங்களை எப்படிங்காணும் அக்கிரகாரத்திற்குள் விட்டீர்?''

''நீர் பிராம்மணனாங்காணும்? பூணூலை அறுத்து எறியுங்காணும்!''



''இ ந் த மாதிரி கர்ம சண்டா ளங்கள் உலகத்திலே இருக்கிறத னால்தானே மழை பெய்ய மாட்டேங் கறது!''

''அப்படிப் பெய்தாலும் ஒரேயடியாய்க் கொட்டி வெள்ளமாய் அடிக்கடறது!''

''கனபாடிகளே! கொஞ்சங் கோவிக்கக் காமே கேளுங்கோ. ஆபத்துக்குத் தோஷ மில்லைன்னு பெரியவாள் சொல்லி யிருக்கா....''

''ஆபத்துக்குத் தோஷமில்லையா? ஆமாம், யாருக்கு ஆபத்து வந்தா தோஷ மில்லை? நமக்கு ஆபத்து வந்தா, தோஷ மில்லை. இந்த நீசன்களுக்கு ஆபத்து வந்தா, நமக்கென்னன்னு கேக்கறேன்.''

''அப்படியே அவன்களுக்கு ஆபத்து வந்தது, ஒத்தாசை செய்யணும்னா, அதுக் கோசரம் அவன்களை அக்கிரகாரத்துக் குள்ளே விட்டுடறதா?''

''செய்றதையும் செய்துட்டுச் சாஸ்திரம் பேசறதைப் பார்ரா!''

''தான் கெட்டதுமல்லாமல் சந்திர புஷ் கரணியையும் சேர்த்துக் கெடுத்துவிட்டீரே, ஓய்! இப்போ அக்கிரகாரத்திலே எல்லா ரும்னா பிராயச்சித்தம் பண்ணிக்க வேண்டி யிருக்கு?''

''கோ வி லுக்குப் புண்யாவாசனம் பண்ணணும், இல்லாட்டா பூஜை பண்ணமாட்டேன் என்கிறாரே, குருக்கள்?''

''தயவு செய்து நான் சொல்றதைக் கொஞ்சம் கேளுங்கோ! என் மனச்சாட்சிக் குச் சம்மதமா, நான் ஒன்றும் தப்புப் பண் ணலை. அப்படி நீங்கள் நினைக்கிற பட்சத் தில்....''

''அடேயப்பா! பெரிய மனச்சாட்சிடா இவருக்கு!''

''அப்படித்தான் உம்ம மனச்சாட்சி பாதி ராத்திரிலே வந்து, நீசன்களையெல் லாம் அக்கிரகாரத்துக்குள்ளே விடலாம்னு சொல்லித்தே; நாங்க இவ்வளவு பேரும் உயிரோட தானே இருந்தோம்? எங்களை ஒரு வார்த்தை கேட்டீராங்காணும்?''

''ஏற்கெனவே சேரி தலைகீழாகிக்கறது.

அமரர் கல்கி



"நம்ம வீட்டுக்கு ஒரு கிளி வாங்க லாமா?"

"உங்கம்மா சொல்றதையெல்லாம் அப்படியே திருப்பிச் சொல்லத்தான் நீங்க இருக்கீங்களே, கிளி வேற எதுக்கு?"

– கே. வி.

இனிமே, எங்களை ஒரு பயல் மதிப்பானா? எங்க பேச்சைத்தான் யாராவது கேப் பானா?''

சம்பு சாஸ்திரி இதற்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் கம்மா நிற்க, தீக்ஷிதர் கையை ஓங்கிய வண்ணம், ''முழிக்கிறதைப் பார்ரா முழிக்கிறதை!'' என்றார்.

இதுவரை ரேழிக் கதவண்டை நின்று கேட்டுக் கொண்டிருந்த சாவித்திரி அப் போது குறுக்கே வந்து, ''என்ன மாமா, கையை ஓங்கறயள்? எங்க அப்பாவை அடிச்சு டுவேள் போலிருக்கே?'' என்று ஆத்திர மாய்க் கேட்டாள்.

தீக்ஷிதர், ''ஆமாண்டி, அடிக்கத்தான் போறேன்! நீ யாரடி கேக்கறது?'' என்று மறுபடியும் கையை ஓங்கினார்.

''ரொம்பத் திமிர் புடிச்ச குட்டிங் காணும், முதுகிலே வையுங்காணும் இரண்டு!'' என்று முத்துசாமி அய்யரும் கையை ஓங்கிக் கொண்டு வந்தார்.

சம்பு சாஸ்திரி சாவித்திரியைச் சட் டென்று அணைத்துக் கொண்டார். அதே சம யத்தில் பின்னால், ஒரு பெரிய கனைப்புச் சத்தமும், தடியை ஓங்கித் தரையில் குத்துகிற சத்தமும் கேட்டது. எல்லாரும் திரும்பிப் பார்த்தார்கள். வாசலில் சற்றுத் தூரத்தில் பட்டிக்காரன் நல்லான் வந்து ஒரு பெரிய தடியை ஊன்றிக் கொண்டு நிற்பது தெரிந் தது.

''ஏன் அடிக்க மாட்டான்? பேஷாய் அடிப்பான்! இந்தப் பதிதனுடைய வீட்டு வாசல்லே வந்து நாம் நிக்கறோமோல் லியோ?''

''வாங்கய்யா, போகலாம்!''

''கிளம்புங்கோ!''

''ஏன் இன்னும் நிற்கறயள்? வாங்கோ!''

எல்லாரும் திரும்பிப் போக ஆரம்பித் தார்கள். ஆனால் பத்து அடி போனதும், முத்துசாமி அய்யர் மறுபடி நின்று திரும்பிப் பார்த்து, ''இவன் அப்பன் திவசத்துக்கு இவனை நான் திண்டாட விடாட்டா, நான் போட்டிருக்கிறது பூணூல் இல்லை'' என்றார்.

''அதோடே விடக்கூடாதுங்காணும். அந்தக் கல்கத்தாக்காரன் கிட்டச் சொல்லி, இந்தக் குட்டியைத் தள்ளி வைக்கப் பண்ணி வாமூலவெட்டியா அடிக்கிறேனா இல் லையா பாரும்!'' என்றார் தீக்ஷிதர்.

''அவன் பேரிலே என்னடா தப்பு? நாம் தானேடா இடங்கொடுத்துக் கெடுத்துட் டோம்? மாமாங்கத்துக்குப் போய்ட்டு வந்து, மீனா செத்துப் போய்ட்டாள்னு ஒரே புளுகாப் புளுகினானே, அப்பவே இவனை சாதிப்பிரஷ்டம் பண்ணியிருக்கணும்.''

''அப்படிச் செய்திருந்தா, இவன் பொண்ணுக்குக் கல்யாணமே ஆகாம நின் னுடியிருப்பான்.''

சம்பு சாஸ்திரியின் காதில் இதெல்லாம் விழுந்தது. அவர் நல்லானைப் பார்த்து, ''நல்லான்! நீ என்னத்துக்கு இப்போது இங்கே வந்தே? போ, வேலையைப் பாரு!'' என்று சொல்லிவிட்டு, உள்ளே பூஜை அறைக்குள் சென்றார். அம்பிகையின் விக் கிரகத்தின் முன்னால் உட்கார்ந்து, 'அம் பிகே! தாயே! என் அருமை மீனாவை நான் மறக்க முயன்றாலும், இவர்கள் மறக்கவிட மாட்டேனென்கிறார்களே!' என்று எண்ணிக் கண்ணீர் விடுத்தார்.

அவரைப் பின் தொடர்ந்து சென்ற சாவித்திரி, 'ஸ்வாமி! பகவானே! தீபாவளிக்கு இவர் வரப்போற சமயத்திலேதானா, இத்தர் சங்கமெல்லாம் வரவேணும்?' என்று எண்ணி ஏங்கினாள். அவளுடைய கண்களி லும் ஜலம் ததும்பிற்று.

## 17. ஸ்ரீதரன் சங்கடம்

நெடுங்கரையில் சாவித்திரி, 'தீபா வளி சமயத்தில்தானா இப்படியெல்லாம் வரவேணும்?' என்று சங்கடப்பட்டுக் கொண்டிருக்கையில், கல்கத்தாவில் ஸ்ரீதர னும் தீபாவளியை நினைத்துப் பெரிதும் சங்கடப்பட்டுக் கொண்டிருந்தான்.

கல்யாணம் ஆன இரண்டு மாதத்துக் கெல்லாம் ஸ்ரீதரனுக்குக் கல்கத்தாவில் பெரிய உத்தியோகம் ஆனபோது, தன்னு டைய அபாரமான புத்திசாலித்தனத்துக் காகத்தான் மேற்படி வேலை தனக்குக் கிடைத்தது என்று அவன் நினைத்தான்.

சாவித்திரியைக் கல்யாணம் பண்ணின முகூர்த்தந்தான் ஸ்ரீதரனுக்கு வேலை கிடைத் தது என்றும், அவளுடைய அதிர்ஷ்டந்தான் காரணமென்றும் தங்கம்மாள் சொன்னாள்.

ராஜாராமய்யர் ஒன்றும் நினைக்கவும் இல்லை; சொல்லவும் இல்லை. ஏனெனில், உத்தியோகம் எப்படிக் கிடைத்ததென்பது அவருக்கு நன்றாய்த் தெரியும். கல்கத்தாவில் ராஜாராமய்யர் உத்தியோகம் பார்த்தபோது அவருக்கு மேலதிகாரியாயிருந்த ஆங்கில துரை அவரிடம் மிகவும் விசுவாசம் வைத்தி ருந்தார். ஆனால், அவருடைய மனோதத் துவ சோதனைகள் ஆவி உலக ஆராய்ச்சிகள்

இவற்றைப் பரிகாசம் செய்து வந்தார். ராஜா ராமய்யர் உத்தியோகத்திலிருந்து விலகி ஊருக்கு வந்த பிறகு, மேற்படி துரையின் அருமை மனைவி இறந்து போனாள். இதன் காரணமாக, துரைக்கும் ஆவி உலக ஆராய்ச்சிகளில் சிரத்தை உண்டாயிற்று. ஒரு வேளை ராஜாராமய்யரின் நம்பிக்கையில் உண்மையிருக்குமோ, இறந்துபோன தமது மனைவியுடன் தாம் பேசுவது சாத்தியமா யிருக்குமோ என்றெல்லாம் அவருக்குச் சபலம் உண்டாயிற்று. ராஜாராமய்யருடன் கடிதப் போக்குவரவு தொடங்கினார். பிறகு, ராஜாராமய்யர் கல்கத்தாவுக்கே வந்து விட்டால்தான் அந்த ஆராய்ச்சிகளை நன்கு நடத்த முடியுமென்று தோன்றியது. எனவே, ராஜாராமய்யரைக் கல்கத்தாவுக்கு வரப் பண்ணுவதற்காக, துரை அவருடைய பிள்ளை ஸ்ரீதரனுக்கு பே அண்டு ஓ பாங்க் என்னும் பிரசித்தி பெற்ற இங்கிலீஷ் பாங் கின் கல்கத்தா கிளை ஆபீஸில் உதவி மானேஜர் வேலை செய்து வைத்தார்.

ஆகவே, ஆனி மாதத்திலேயே ராஜா ராமய்யருடைய குடும்பம் கல்கத்தாவுக்குப் போக வேண்டியதாயிற்று. கல்கத்தாவில் தென்னிந்தியர் வசித்த பகுதியில் ஒரு தனி வீடு எடுத்துக் கொண்டு குடித்தனம் தொடங் கினார்கள். ஸ்ரீதரன் அப்படி ஒன்றும் அசடு இல்லையாதலால், உத்தியோகத்தைத் திற மையாகப் பார்த்து, துரைக்குத் திருப்தி யளித்து வந்தான்.

தங்கம்மாளுக்கு மட்டும் ஒரு மனக் குறை இருந்து கொண்டுதான் இருந்தது. ஆடி, ஆறாம் மாதம், ஆவணியவிட்டம் இவற்றுக்கெல்லாம் நெடுங்கரைக்குப் போய் அதிகாரம் பண்ணிச் சீர் செனத்தி கொண்டு வரவில்லையே யென்பதுதான் அந்தக் குறை. ஆனால், எல்லாவற்றுக்கும் சேர்த்து வைத்து தலை தீபாவளிக்குப் போய்க் கொண்டுவந்து விடலாமென்று அவள் ஆசைப்பட்டுக் கொண்டிருந்தாள். தீபாவளிக்கு ஒரு மாதத்துக்கு முன்னா லிருந்தே பிள்ளைக்கு அவள் உரையேற்ற ஆரம்பித்து விட்டாள்.

ஸ்ரீதரனுக்கோ, இது கொஞ்சங்கூட இஷ்டமில்லை. ஏற்கெனவே அவனுக்கு இந்தக் கல்யாணம் பிடிக்கவில்லை. சாவித் திரியை நினைத்தால் அவனுக்கு அருவருப் பாயிருந்தது. நெடுங்கரையையும், சம்பு சாஸ்திரியையும் எண்ணினால் அவனுடைய உடல் குன்றியது. இவ்வளவுடன் இப்போது ஒரு புதிய காரணமும் சேர்ந்திருந்தது.

ஸ்ரீதரன் உத்தியோகம் பார்த்த பாங்கில் டைப் அடிக்கும் வேலைக்கு ஆங்கிலோ-இந்தியப் பெண்கள் அமர்த்தப்பட்டிருந்தார் கள். ஸ்ரீதரன் வேலைக்குப் போன அன்று, அவர்களில் ஒருத்தி அவனுடைய அறைக் குள் வந்தாள். ''ஆர் யூ மிஸ்டர் ஸ்ரீதர்?'' என்று கேட்டாள். அந்தக் குரல் ஸ்ரீதரனுக்கு தேவகானம்போல் இருந்தது. கண்கொட்டா மல் அவளைப் பார்த்தபடி, ஆம் என்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தான் ஸ்ரீதரன். ''வாட் எ லவ்லி நேம்!'' என்றாள் அந்தப் பெண். ஸ்ரீதரனுக்கு அப்போது தன் பெற்றோர்கள் மீது மிகவும் நன்றி உண்டா யிற்று. தனக்கு எத்தனையோ விதத்தில் அவர்கள் கெடுதல் செய்திருந்தாலும், இவ் வளவு அழகான பெயரைக் கொடுத்தார் களே என்று எண்ணினான். பிறகு அந்தப் பெண், ஸ்ரீதரனுடைய கடிதங்களை டைப் அடிப்பதற்குத் தன்னை நியமித்திருப்பதாக வும், அவன் கூப்பிடும்போது வருவதாகவும் சொல்லிவிட்டுப் போய்விட்டாள்.

இதுவரையில் தான் கனவு கண்டு கொண்டிருந்த கந்தர்வப் பெண் இவள்தான் என்று ஸ்ரீதரன் அந்த நிமிஷமே தீர்மானித்து விட்டான். நாளுக்கு நாள் அவனுக்குப் பித் தம் தலைக்கேறிக் கொண்டிருந்தது. ஒரு நாள் சாயங்காலம் ஸ்ரீதரன் ஆபீஸை விட்டுக் கிளம்பிய நேரமும் மிஸ் லூஸி கிளம்பிய நேரமும் சரியாயிருந்தது. அப்போது ஸ்ரீதரன் ஆபீஸுக்குப் போய் வருவதற்கு மோட்டார் சைக்கிள் வைத்திருந்தான். அவன் சைக்கி ளில் ஏறி உட்கார்ந்துகொண்டு, லூஸிக்குப் பின் ஸீட்டில் உட்கார்ந்து வரத் தைரியமிருந் தால், அவளுடைய ஜாகையில் கொண்டு போய் விடுவதாய் விளையாட்டாகச் சொன் னான். அந்தப் பெண் மிகவும் துணிச்சல் உள் ளவள். அவன் சொல்லி வாய் மூடுவதற்கு முன்னால் பின் ஸீட்டில் ஏறி உட்கார்ந்து விட்டாள். அதிகம் வளர்த்துவானேன்! அது முதல் ஸ்ரீதரனும் அந்த ஆங்கிலோ-இந்தி யப் பெண்ணும் 'ஒருயிரும் ஈருடலும்' என் பார்களே, அந்த மாதிரி ஆகி விட்டார்கள்.

இந்த நிலைமையில், தங்கம்மாள் தலை தீபாவளிப் பேச்சை எடுத்ததிலிருந்து ஸ்ரீதர னுக்கு அடிக்கடி மனச் சோர்வு உண்டா யிற்று. கோபம் கோபமாய் வந்தது. அந்தப் பாழும் கல்யாணம் மட்டும் ஆகாதிருந்தால் இப்போது எவ்வளவு சௌகரியமாயிருக் கும்! தன்னுடைய சந்தோஷத்துக்கு ஓர் எல் லையேயிராதல்லவா! ஸ்ரீதரனுடைய மனோ சஞ்சலத்தைக் கண்ட மிஸ் லூஸி, ''என்ன சமாசாரம்?'' என்று அவனை அடிக்கடி வற்புறுத்திக் கேட்டாள்.

ஸ்ரீதரன் அப்போது உண்மையைச் சொன்னான்: தன்னுடைய கல்யாண விஷ யத்தை அவளிடம் சொல்லிவிட வேண்டு மென்ற எண்ணம் அவனுக்கு முன்பே இருந்தது. அதை மறைத்து வைப்பதால் பின்னால் சங்கடம் ஏற்படும் என்று அவன் எண்ணினான். இந்த மாதிரி விளைந்த சங்கடங்களைப்பற்றி அவன் நாவல்களி லும், கோர்ட் விவரங்களிலும் படித்திருந் தான். ஆகவே, இதுதான் தக்க சமயம் என்று தீர்மானித்து, தன் பெற்றோர்களுடைய வற் புறுத்தலினால் தான் கல்யாணம் செய்து கொள்ள நேர்ந்ததையும், ஆனால் அந்தப் பீடையின் முகத்தில் விழிக்கவே தனக்கு

விருப்பமில்லையென்பதையும், இப்போது தலை தீபாவளிக்குப் போக வேண்டுமென்று தாயார் தொந்தரவு செய்து கொண்டிருப்பதையும் கூறினான். இடையிடையே, ஹிந்துக்களுக்குள் கல்யாண விஷயத்தில் அநுசரிக்கப்படும் முறை எவ்வளவு அநாகரிகமானது என்பதைப் பற்றித் தன்னுடைய சொந்த அபிப்பிராயத்தையும் காரமான மொழிகளில் தெரிவித்து வந்தான்.

இப்படியெல்லாம் உண்மையைச் சொல்லி அந்தப் பெண்ணின் அநுதாபத்தைப் பெறலாமென்று ஸ்ரீதரன் எதிர்பார்த்தான். ஆனால், அந்த அநுதாபத்தை உடனே அவன் பெறவில்லை. பிறகு இரண்டு மூன்று நாளைக்கு அந்தப் பெண் அவனுடன் பேசவும் இல்லை; அவன் முகத்தை ஏறெடுத்துப் பார்க்கவுமில்லை. இதனால் ஸ்ரீதரன் வெறி கொண்டவன்போல் இருந்த நிலைமையில், அவளாக அவனைத் தேடிக்கொண்டு வந்து சமாதானப்படுத்தினாள். அவன் தன்னை ஏமாற்றியதை மன்னித்து விடுவதாகச் சொன்னாள். ஆனால் ஒரு நிபந்தனையின் பேரில்தான். உமது மனைவியை நான் பார்க்கவேண்டும்!'' என்றாள்.

அவள் சமாதானம் அடைந்ததில் ஸ்ரீதரனுக்கு ஒரே குதூகலம். எனவே, ''அதற்கென்ன பிரமாதம்? அவள் இங்கே வரும் போது - எப்போதாவது வந்தால்-நீ கட்டாயம் பார்க்கலாம்'' என்றான் ஸ்ரீதரன்.

''அதெல்லாம் முடியாது; இப்போதே பார்க்க வேண்டும்'' என்றாள் லூஸி.

''அது எப்படிச் சாத்தியம்? இப்போது எப்படிப் பார்க்கிறது?''

''தீபாவளிக்கு நீர் கிராமத்துக்குப் போகிறீர் அல்லவா? உம்முடன் நானும் வருகிறேன்'' என்றாள்.

ஸ்ரீதரன் திகைத்து நிற்கும் போதே, அவள் அவனுடைய கன்னத்தை ஒரு தட்டுத் தட்டி, ''பயந்து போகாதேயும். நான் இப்படியே வரவில்லை. ஆண் வேஷம் போட்டுக் கொண்டு வருகிறேன். உம்முடைய சிநேகிதன் என்று சொல்லி, என்னை அழைத்துக் கொண்டு போம்!'' என்றாள்.

''சபாஷ்!'' என்றான் ஸ்ரீதரன். ஏற்கெனவே மிஸ் லூஸியை ஆண் உடையில் அவன் பார்த்திருக்கிறான். வேஷம் பொருத்தமாயிருக்கும், சந்தேகமில்லை. தீபாவளிக்கு மாப்பிள்ளைத் தோழன் ஒருவனை அழைத்துப் போவது வழக்கமல்லவா? இவளை மாப்பிள்ளைத் தோழனாக அழைத்துப் போகலாமே? பிரயாணமும் வெகு குஷியாயிருக்கும்! - இப்படி எண்ணி, ''சபாஷ்! சரியான யோசனை! அப்படியே செய்வோம்!'' என்றான் ஸ்ரீதரன்.

சில நாள் ஊடல் கொண்டிருந்த பிறகு மறுபடியும் அவள் சிநேகிதமான குதூகலத்தில் ஸ்ரீதரன் அவ்வாறு வாக்குக் கொடுத்துவிட்டான். ஆனால் அப்புறம் அதைப் பற்றி அபாயங்களும் தெரிய வந்தன. அம்மாவும் கூட வரப்போகிறாளே! பிரயாணத்தின் போது நடுவில் அம்மாவுக்குத் தெரியாமலிருக்குமா? அல்லது நெடுங்கரையில்தான் இவள் எப்படி இருக்க முடியும்? அந்தப் பட்டிக்காட்டில் இவளுக்குத் தனியாயிருக்க இடம் எங்கே கிடைக்கும்? தெரிந்து விட்டால் எவ்வளவு அவமானம்! ஏதாவது விபரீதமாக முடிந்தாலும் முடியலாம் அல்லவா? - இதையெல்லாம் நினைக்க நினைக்க ஸ்ரீதரனுக்குப் பயம் அதிகமாகி வந்தது.

ஒருவேளை லூஸி விளையாட்டுக்காகச் சொல்லியிருக்கலாம் என்று தோன்றியது. அவளிடம் அம்மாதிரி பிரஸ்தாபிக்கவும், அவள் நிஜமாகவே தான் வரப் போவதாக வற்புறுத்தினாள். பிரயாணத்துக்கு வேண்டிய ஆயத்தங்கள் செய்வதும் ஸ்ரீதரனுக்குத் தெரிந்தது. அதன்மேல் ஸ்ரீதரன் அந்தப் பைத்தியக்கார யோசனை வேண்டாம் என்றும், அதில் ரொம்ப அபாயம் இருக்கிறதென்றும், தானும் தீபாவளிக்கே போகவில்லையென்றும் சொல்லிப் பார்த்தான். லூஸி கேட்கவில்லை. ஸ்ரீதரனை பயந்தாங்கொள்ளி என்று பரிகாசம் செய்ய ஆரம்பித்தாள். ''உம் மனைவியை நான் பார்க்கக் கூடாது என்பதுதானே உம் எண்ணம்?'' என்று கண்ணீர் விடத் தொடங்கினாள்.

இந்தத் தர்மசங்கடமான நிலைமையில் என்ன செய்வதென்று தெரியாமல் ஸ்ரீதரன் தத்தளித்துக் கொண்டிருந்தான். ஒரு பக்கம் தங்கம்மாளும் இன்னொரு பக்கம் லூஸியும் பிரயாணத்துக்குத் தயார் செய்து கொண்டிருந்தார்கள். எனவே, ஸ்ரீதரனும் புறப்படுவதற்கான ஏற்பாடுகளைச் செய்தான். ஆனால் அவனுடைய மனம் மட்டும் என்ன நேரிடுமோ என்னவோ என்று பதை பதைத்துக் கொண்டிருந்தது.

(தொடரும்)



அரசியல்வாதி : வயதாக வயதாகக் கற்பனைவளம் குறையுமா டாக்டர்?

டாக்டர் : ஏன், எதுக்காக அப்படிக் கேட்கறீங்க?

அரசியல்வாதி : இப்பல்லாம் யார் மேலேயும் என்னால ஊழல் குற்றச்சாட்டு சுமத்த முடியலையே...!

- புதுவண்டி ரவீந்திரன்

# பெறுவீர் சான்மேக் கிஃப்ட் கார்டு.




## 5வது ஆண்டு நிறைவு விழாவையொட்டி
## சான்மேக் சிட்ஸ் அளிக்கும் சிறப்புச்சலுகை

சான்மேக் சிட்ஸ் கடந்த 5 ஆண்டுகளாக அதன் வாடிக்கையாளர்களுக்கு உறுதிப்பாட்டுடன்கூடிய சேவையை அளித்து வருகிறது.

இனி வரும் ஆண்டுகளிலும் இது போன்ற சேவை தொடரும் என்பதை குறிக்கும் வகையில் சான்மேக் சிட்ஸ் அளிக்கும் இணையற்ற சலுகை

### சான்மேக் கிஃப்ட் கார்டு.

செப்டம்பர் 15ம் தேதி முதல் நவம்பர் 15ம் தேதி, 1993 வரை எந்தவொரு சீட்டு குரூப்பிலும், சேரும் ஒவ்வொரு சந்தாதாரரும் பெறும் சிறப்புரிமை!

சான்மேக் கிஃப்ட் கார்டு. இந்த கிஃப்ட் கார்டு பெறுவதைத் தொடர்ந்து நீங்கள் மகிழ்வூட்டும் பல பயன்களைப் பெறுவீர்கள். சான்மேக் சிட்ஸிலிருந்து மட்டுமின்றி மற்ற சான்மேக் குரூப் நிறுவனங்களிடமிருந்தும் பலப்பல பயன்களை நீங்கள் பெறலாம்.

எனவே, வாடிக்கையாளர்களுக்குச் சேவையளிப்பதில் 5 ஆண்டு வெற்றிகரமாக நிறைவு பெறுவதை சான்மேக் சிட்ஸ் மகிழ்ச்சியோடு கொண்டாடும் இவ்வேளையில், நீங்களும் ஒரு 'கிஃப்ட் கார்டு' பெற்று மகிழ்வடையுங்கள்.

அதன்மூலம் ஒரு நம்பகமான, ஸ்திரமான சீட்டு நிறுவனத்தில் உறுப்பினராக இருப்பதனால் பெறக்கூடிய எல்லா சிறப்புரிமைகளையும் அனுபவியுங்கள்.

முக்கிய அம்சங்கள் :

- 5 ஆண்டுகளிலேயே ரூ. 22 கோடி சீட்டுப்பரிசுப் பணமாக விநியோகிக்கப்பட்டுள்ளது.
- 10,000 பேருக்கும் கூடுதலான சந்தாதாரர்கள்

| சீட்டு குரூப்புகள் | சீட்டுத் தொகை ரூ. | அனுமதி கட்டணம் ரூ. | பரிசுப் பொருட்கள் |
|---|---|---|---|
| ரூ. 400 × 25 மாதங்கள்<br>ரூ. 500 × 20 மாதங்கள் | 10,000 | 40 | எவர்சில்வர் பேசின் |
| ரூ. 1,000 × 25 மாதங்கள்<br>ரூ. 625 × 40 மாதங்கள் | 25,000 | 75 | எவர்சில்வர் சிற்றுண்டி செட் |
| ரூ. 500 × 60 மாதங்கள்<br>ரூ. 1,500 × 20 மாதங்கள்<br>ரூ. 750 × 40 மாதங்கள் | 30,000 | 100 | எவர்சில்வர் சாப்பாடு செட் |
| ரூ. 2,000 × 25 மாதங்கள்<br>ரூ. 1,250 × 40 மாதங்கள்<br>ரூ. 1,000 × 50 மாதங்கள் | 50,000 | 125 | எவர்சில்வர் பால் பாத்திரம் |
| ரூ. 1,250 × 60 மாதங்கள் | 75,000 | 150 | எவர்சில்வர் குடாய் (மூடி இல்லாமல்) |
| ரூ. 2,500 × 40 மாதங்கள்<br>ரூ. 4,000 × 25 மாதங்கள் | 1,00,000 | 250 | சூட்கேஸ் |
| ரூ. 5,000 × 40 மாதங்கள் | 2,00,000 | 500 | வெள்ளி காமாட்சி விளக்கு |
| ரூ. 10,000 × 50 மாதங்கள் | 5,00,000 | 800 | தங்க காசு |

எல்லா குரூப்புகளுக்கும் உச்ச வரம்பு 30%.

அறிமுகம்

விசேஷ சீட்டு குரூப்புகள் ரூ.10,000 முதல் ரூ.5 லட்சம் வரை.
ஒவ்வொரு சந்தாதாரருக்கும் பரிசு உண்டு.

# சான்மேக் சிட்ஸ் லிமிடெட்

SANMAC CHITS

பதிவு & தலைமை அலுவலகம்
'ஜெம்ஸ் கோர்ட்', A-8, முதல்மாடி, 14, காதர் நவாஸ்கான் ரோடு,
சென்னை 600 006. போன்: 8250601/8251232.

**BID FOR A BETTER LIFE**

கிளை அலுவலகங்கள்: • சென்னை: 'மவுண்ட் சேம்பர்ஸ்', பிளாட் 'E' மூன்றாவது மாடி, 758, அண்ணா சாலை, போன்: 8277363 •5, பாலாஜி அவென்யூ II சாலை, தி.நகர், போன்: 8278515/8258637 • 6, இரண்டாவது அவென்யூ, அசோக் நகர், போன்: 4824757 • பிளாட்-B, தேவர் அபார்ட்மெண்ட்ஸ், 147, லஸ் சர்ச் ரோடு, மயிலாப்பூர், போன்: 4992488 • 'கபில் காம்ப்ளக்ஸ்', C-31, இரண்டாவது அவென்யூ, அண்ணா நகர் மேற்கு, போன்: 6214454 • 31, அய்யாசாமி வீதி, மேற்கு தாம்பரம் (நேஷனல் தியேட்டர் அருகில்) போன்: 401934 (PP) • பிளாட் 55, 'Bhaiya Complex', 286, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (டோவ்டன் கபே எதிரில்) சென்னை 600 007 • மதுரை: 'NCS பில்டிங்ஸ்', இரண்டாவது மாடி, 113-B, மேற்கு பெருமாள் மேஸ்திரி வீதி, மதுரை-1. போன்: 23334 • கோயம்புத்தூர்: ஸ்ரீநிவாசா டிரேட் சென்டர், 160/27, D.B. சாலை, R.S. புரம் (கென்னடி தியேட்டர் அருகில்) கோயம்புத்தூர்-2. போன்: 46375 • திருச்சி: 21, முதல் மாடி, 'சித்ரா காம்ப்ளக்ஸ்', சிந்தாமணி, திருச்சி-2. போன்: 25324 • திருவண்ணாமலை: 'சஸ்வரி காம்ப்ளக்ஸ்', 23/12, கோபால் பிள்ளையார் கோயில் சாலை, திருவண்ணாமலை-1. போன்: 2579 (PP). • கும்பகோணம்: 41, நாகேஸ்வரன் சன்னதி வீதி, கும்பகோணம்-1 • திருநெல்வேலி: 25-B, S.N. நெடுஞ்சாலை, 'SRC காம்ப்ளக்ஸ்', இரண்டாவது மாடி, திருநெல்வேலி-1. போன்: 322032.

Adwise/3426/97


சிரிப்புக் கதிர் இயக்கம்!
ஆர். பி. சாரதி
இருட்டிலே எ ணமோ மூடி மூ எடுத்துட்டுப் போ களே, ஒருவேள கதிரியக்கப் பே இருக்குமோ,
ஆனாலும் தலை வர், லை.சோவை அவ்வளவு கேவலமா திட்டியிருக்கக் கூடாது!
என்ன, 'கட்சியைப் பிளக்கிற பாதகா'ன்னு சொல்லிட்டாரா?
அப்படிச் சொன்னாலும் பாதக மில்லையே. 'கட்சிக்குள் கதிரியக்கம் பரப்புறான்'னு பேசிட்டாரே!
கதிரியக்கப் பேழை அரசுத் துறை நிறுவனத் துல காணாமப் போயிருந்தா நல்லாயிருந்திருக்குமேன்னு அமைச்சர் ரொம்ப வருத் தப்படறார்.
தீபாவளி சமயமா இருந்தும் அந்தக் கடையி லிருந்து எல்லாரும் ஒதுங்கி ஒதுங்கிப் போறாங்களே, ஏன்?
தீபாவளிக்குக் கதர் இயக்கம்னு எழுதச் சொன்னா, கதிர் இயக்கம்னு விளம்பர பானர் எழுதித் தொலைச் சுட்டானே, அதான்!
தீபாவளி கதிர் இயக்கம் 20% to 50% தள்ளுபடி
தலை தீபாவளிக்கு வராத இருந்த மாப் பிள்ளை, இமர்னு வர லைன்னு தந்தி அடிச் சுட்டாரே, ஏன்?
நம்ம வீ துல கதிர் வ யாரோ பே போலிருக்கு படுதுன்னு அவ


''அதெல்லாம் ஒண்ணுமில்லே, ஒரு குடம் குடி தண்ணி கிடைச்சதாம். அதைத்தான் ஒளிச்சு ஒளிச்சுக் கொண்டு போறாங்க.''
அப்பவே சொன்னேன், 'கூவத்துல மீன் பிடிக்கப் போகாதேடா, அங்கிருக்கிற மீன்கள் கதிரியக்கத்தால பாதிக்கப்பட்டிருக்கலாம்'னு. கேட்டியா?
ஏனுங்க அப்படி? அதைக் கண்டெடுக்க காண்ட்ராக்ட் விடும் போது கமிஷன் அடிச்சிருக்கலாமே! இல்லாமப் போச் சேன்னுதான்!
கதிரியக்கப் பேழையைக் கூவத்திலிருந்து எடுக்க எப்படி நீங்க அவ்வளவு துணிச்சலா முன்வந்தீங்க?
ஹூம், என் சம்சாரத்தையே சமாளிக்கும் எனக்கு, இது ஒரு பெரிய விஷயமா?
மூணு கதிரியக்கக் கருவிகளையும்தான் கண்டு பிடிச்சு எடுத்தாச்சே, கூவத்துல இன்னும் என்னத்தைத் தேடிக்கிட்டிருக்காங்க?
கதிரியக்கக் கருவி இருக்குமிடத்தைக் கண்டுபிடித்துச் சொல்லும் கருவியைக் காணுமாம்!



# "கலைக்கு மொழி தடையில்லை!"

**இ**ந்தித் திணிப்பை எதிர்க்கும் தமிழ் நாட்டிலேயே ஒரு இந்தி தொடர், பிடிவாத மாகச் சக்கை போடு போடுகிறதென்றால்... அதில் ஏதோ விசேஷமிருக்கத்தானே செய்யும்?

"புராணத் தொடரான கிருஷ்ணாவுக்கு அடுத்தபடியாக, தமிழ்நாட்டு மெட்ரோவில் மிகவும் பாப்புலரான சமூகத் தொடர் ஜுனூன்! (பிடிவாதம்). அகில இந்திய அளவில், மெட்ரோ தொடர்களில் ஜுனூனுக்குத்தான் முதலிடம் என்கிறார் இதன் தயாரிப்பாளரான பிரேம் கிஷன்! இதற்கு முன்பு 'கதா சாகர்', 'ரிஷ்டா', 'ஜிந்தகி', 'குல் குல்ஷன் குல்ஃபான்' போன்ற தரமான தொடர்களை ரசிகர்களுக்கு வழங்கி, பல பரிசுகளையும் பெற்றிருக்கிறார்.

"தமிழ் நாட்டில் ஜுனூன் எப்படி இத்தனை பாப்புலரானது?"

"இதற்கு முக்கியக் காரணங்கள் - கதையமைப்பு, 'ஸ்டார் வால்யூ' மிக்க நடிக நடிகையர், இசை, சிறப்பான டைரக்ஷன் என்று பலவற்றைச் சொல்லலாம்! 'பிடிவாதம்' பிறப்பதற்கு அடிக்கல் நாட்டியவர், அதன் கதாசிரியர் கவில் மேத்தா. இன்று சமூகத்தில் மலிந்திருக்கும் முறைகேடுகள், தொழில் ரீதியான போட்டி, பொறாமைகள் முதலியவற்றை இரு குடும்பங்களின் வாயிலாகக் காட்டுவதுதான் பிடிவாதம்! இது நான்கு தலைமுறைகளைப் பற்றிய கதை. முதல் தலைமுறையை பரீக்ஷித் சஹானி, ஃபரீதா ஜலால், நீனா குப்தா, சயீத் ஜாஃப்ரீ போன்ற நட்சத்திர நடிகர்களைச் சுற்றிப் படர்ந்தது கதை.

இப்போது நடந்து கொண்டிருப்பது இரண்டாவது தலைமுறைக் கதை! இனிவர இருக்கும் மூன்றாவது தலைமுறையில், இப்போதிருக்கும் குழந்தைகள் பெரியவர்களாகி, காதலித்து, திருமணம் செய்து கொள்வார்கள்! மறுபடியும் அவர்களிடையே வேற்றுமைகள் தலை தூக்கும்; பிடிவாதம் வளரும்... கடைசித் தலைமுறையைப் பற்றி இப்போதே சொன்னால் சுவாரஸ்யம் போய் விடும்" என்கிறார், பிரேம் கிஷன்!

**த**ற்சமயம் இவர்களுக்கு 78 பாகங்களுக்கான நேரம் மட்டுமே ஒதுக்கப்பட்டுள்ளது.

"ஆனால் தூர்தர்ஷனின் 'அருட்பார்வை' கிட்டினால் இது 104 வரை நீட்டிக்கப்படும்" என்கிறார் எடிட்டிங் பொறுப்பிலிருப்பவர். "ஹம் லோக்", "புனியாத்" வழியில் மற்றுமொரு நீண்ட சமூக - புராணத்தை நாம் எதிர்பார்க்கலாம்!

அடிப்படையில், ஜுனூனைப் பொழுதுபோக்குப் படமாகத்தான் எடுத்திருக்கிறார்கள். "அரசியலோ, ஆபாசமோ கிஞ்சித்தும் கலக்கவில்லை! உள்ளதை உள்ளபடி காட்டுகிறோம். மக்களை திசை

திருப்பவுமில்லை; தவறான போதனைகள் செய்யவுமில்லை. எது நல்லது, எது கெட்டது என்பதை அவர்கள் கதைப் போக்கில் இயல்பாகப் புரிந்து கொள்வார்கள்'' - என்கிறார் பிரேம் கிஷன்.

''நடிக நடிகையர் தேர்வு எப்படி நடைபெறுகிறது?''

''சாதாரணமாக, 'சினிவிஸ்டா' தயாரிப்புகள் அனைத்தும் விலை போகக்கூடிய, முதல் தரமான நட்சத்திரங்களை வைத்துத் தான் எடுக்கப்படும். ஒரு சில நடிக நடிகையரை ஸ்பான்ஸர்கள் சிபாரிசின் பேரில் எடுக்கிறோம்.''

''இவ்வளவு பெரிய நட்சத்திரக் குவியலை வைத்துப் படமெடுப்பது கடினமாக இல்லையா?''

''இல்லவே இல்லை. உண்மையில் சில நட்சத்திரங்கள், திரைப்படங்களில் நடிப்பதைக் காட்டிலும், டி.வி. ஸீரியலில் நடிப்பதைத்தான் அதிகம் விரும்புகிறார்கள். பரீஷித் சஹானி, குல் குல்ஷன் குல்ஃபானில் கிடைத்த ரோலை, ''லைஃப் டைம் ரோல்'' என்று பெருமையாகச் சொன்னார். சுரேஷ் சைத்வாலும், ஜுனூனில் தனக்குக் கிடைத்திருக்கும் பாத்திரத்தை பெரும் பாக்கியமாகக் கருதுகிறார். இனி வர இருக்கும் தொடர்களில், கிரண் ஜுனேஜா (மஹாபாரத கங்கா), விக்ரம் கோகலே (மராத்தி கதா நாயகன்) போன்றவர்கள் தோன்ற இருக்கிறார்கள். பெரிய நட்சத்திரங்கள் என்றாலும் மிகச் சிறந்த முறையில் ஒத்துழைப்புத் தருவதால் எந்தவித சிரமமுமில்லை! ஷூட்டிங்கின் போதும் தகராறுகள், தொல்லைகள் எதுவுமில்லை!''

''படப்பிடிப்பின் போது ஏதேனும் சவால்கள்....?''

''குல் குல்ஷன் குல் ஃபானை காஷ்மீரில் நாங்கள் படமாக்கிக் கொண்டிருக்கும் போது, அங்கே குண்டு மழை பொழிந்து எங்களை நிலை குலைய வைத்ததே, அதை நினைத்தாலே குலை நடுங்கும்! அதனால் இந்த ஜுனூன் ஸீரியலுக்கு 'அவுட்டோர்' என்று பிரமாதமாக எங்கும் போகவில்லை. எல்லாம் ஜுஹுவிலேயே படமாக்கி விட்டோம்! முதல் தலைமுறைக் கதையை எடுக்கும் போது, சில காட்சிகளை குஜராத்தில் எடுத்தோம்! மற்றபடி கிம்பி காட்கர் (மின்னி) - விஜயேந்திரா (பாடியா) ஹனிமூன் காட்சிகள் (காஷ்மீர்) உட்பட, எல்லாமே உள்ளூர்தான்! சிரமமென்று பார்த்தால், முதல் தலைமுறையினரின் உடைகளைத் தேர்வு செய்வதில் சிறிது கஷ்டமிருந்தது. அந்தக் காலத்தில் என்ன உடுத்திக் கொண்டார்கள் என்று பார்த்துப் பார்த்து உடைகளை அமைக்க வேண்டியிருந்தது. அதன்பின் இன்றைய தலைமுறை எல்லாம் தற்கால உடைகளில் தோன்றுகின்றனர். இனி வரப் போகும் காலத்திற்கும் 'மாடர்ன்' உடைகளே போதுமானது!''

''டெக்னிகலாக ஏதேனும் புதிய உத்திகள் கையாளப்பட்டுள்ளனவா?''

''புதிது என்று சொல்வதற்கில்லை; ஆனால் ஃபிலிமிலிருந்து டெக்னீஷியன்கள் வரை எல்லாமே தரமானவைதாம்! இது மெட்ரோ சானலுக்குத்தானே என்று, எந்தத் துறையிலும் எதையும் குறைத்து விடவில்லை!''

''தமிழில் 'டப்' செய்யும் போது உச்சரிப்புக்கும், வாய் அசைவுகளுக்கும் நிறைய மாறுபாடு இருக்கிறதே, கவனிக்கவில்லையா?''

''டப்பிங்கை நான்தான் மேற்பார்வையிடுகிறேன்; எனக்குத் தமிழ் தெரியாது தான்!'' என சிரித்துக் கொண்டே ஆரம்பிக்கிறார் கிஷோர் சேத்தி! ஆனாலும் வாயசைவுகளை வைத்து ஓரளவு சமாளித்து விடுவேன். 'டப்பிங்' ஆர்ட்டிஸ்டுகள் எல்லாம் தங்கள் வேலையை ஒழுங்காகத்தான் செய்கிறார்கள். இருந்தாலும், 'ரீ-ஷூட்' செய்யாமல், 'டப்' செய்யும் போது, வேறுபாடுகள் தலை தூக்கத்தான் செய்யும்! இதுவரை இடம் பெற்ற ஐந்து பாடல்களையும் அப்படியே இந்தியிலேயே ஒலிபரப்பி விட்டோம், தமிழ்ப்படுத்துவது சுலபமில்லை என்பதால்! ஆனாலும் இதைப் பெரிய குறையாக தமிழ் ரசிகர்கள் சுட்டிக் காட்டவில்லை. கலைக்கு மொழி ஒரு தடையில்லை அல்லவா?''

''தமிழ் நாட்டிலிருந்து, "feed back" எப்படியிருக்கிறது?''

''ரொம்ப ரொம்ப நன்றாக இருக்கிறது. அவர்கள் 'பிடிவாதத்தை' மிகவும் ரசிக்கிறார்கள். அங்கே ஒரு தொழிலதிபர் தன் குழந்தைக்கு ''ஆதித்ய தன்ராஜ்'' எனப் பெயர் சூட்டியிருக்கிறாரென்றால், அவர்கள் சீரியலுடன் எவ்வளவு ஒன்றிப் போயிருக்கிறார் கள், பாருங்கள்! சஷி பூரி, சுரேஷ் சைத்வால், கிட்டு கித்வானி இவர்களை தமிழ் ரசிகர்கள் விரும்பி ஏற்கிறார்கள். கிட்டு (மின்னி) கதையை ஒரு இடைச் செருகலாகத்தான் புகுத்தியிருந்தோம். ஆனாலும் மின்னி யின் பிடிவாத குணம், ரசி கர்கள் மனத்தில் ஒரு தனி இடத்தைப் பிடித்து விட்டது!''

உண்மைதான்; நம் வீட்டிலே ஏதாவது தகராறு என்றால், ''பிடிவாதம் பிடிவாதம்'' என்ற டைட்டில் சாங் ஒலிக்க ஆரம்பித்து விடுகிறதே!

பேட்டி : ஜெயஸ்ரீ ராஜ்



● டாம் ஆல்டர்

# விஷ்வக்சேனன்

## 43. சர்ப்பங்கள் மூன்று

**வே**ங்கைகள் அதிகம் உலவியதால் அந்த வனப் பகுதி புலியாரா என்று பெயர் பெற்றது. தற்பொழுதும் அதே பெயர் வழங்கி வருகிறது. அந்த இடத்திலிருந்து தொடங்கும் மலைக்கணவாய், புதர்களும் பாறைகளும் நிறைந்த காட்டு வழியாகவே இருந்தது. எப்பொழுதும் அங்கு வீசிக் கொண்டிருந்த குளிர்ந்த மலைக் காற்று, சேரர் உபதலைவன் ரவிசேகரனின் சிந்தனை நிரம்பிய முகத்தைச் சிவக்கச் செய்தது. அவன் புரவியும் அவன் சிந்தனையைப் புரிந்து கொண்டதாலோ என்னவோ, அந்த மலைக் கணவாயில் நிதான நடை பயின்று கொண்டிருந்தது. வீரர்கள் தொடரச் சென்று கொண்டிருந்த அவனுக்கு முதல் ஜாம இறுதியில் கிடைத்திருந்த சேரர் படைத் தலைவரின் ஓலைதான் சிந்தனைக்குக் காரணமாயிற்று. உடனடியாகப் படைகளை கோட்டாறை நோக்கி நடத்திச் செல்லப் பணித்த அந்த ஓலையிலிருந்த முத்திரையிலோ, கையொப்பத்திலோ எந்தவித சந்தேகமில்லையென்றாலும், அவன் மனத்தில் இனந்தெரியாத சஞ்சலமொன்று தோன்றியிருந்தது. ஆனாலும் பத்து தினங்களுக்கு மேல் அங்கேயே தங்கியதால் சலிப்படைந்த சேர வீரர்கள் உற்சாகத்துடன் அவனைப் பின்தொடர்ந்தனர்.

அவன் சந்தேகத்திற்கான விடை அந்த மலைக்கணவாயின் முடிவில் அவனுக்காகக் காத்திருந்தது. வளைவு ஒன்றில் திரும்பிச் சமவெளியை நோக்கிய ரவிசேகரன், அந்த ஓலை சரியான போலி என்பதை உணர்ந்து திகைத்தான். சேரர் படையை எதிர்பார்த்து நின்ற படைகளின் முகப்பில் காத்திருந்தான், சோழர் படையின் பிரதான படைத்தலைவன் காலிங்கராயன். ரவிசேகரன், கண நேரத் திகைப்பை உதறிக் கொண்டு புரவியைப் பாய விட்டான். சேர வீரர்களும் அவனைத் தொடர்ந்தனர்.

ரவிசேகரனது வலது கரம் மின்னல் வேகத்தில் செண்டாயுதத்தை காலிங்கராயனை நோக்கி வீசியது. சரிந்து அதன் இலக்கிலிருந்து தப்பிய காலிங்கராயன், உருவிய தன் வாளால் அதைத் தடுத்து, இரண்டாகப் பிளந்து தரையில் விழச் செய்தான். ரவிசேகரனைப் பின்தொடர்ந்து பாய்ந்த சேர வீரர்களை காலிங்கராயனின் வீரர்கள் எதிர்கொண்டனர்.

சேர வீரர்களின் கை லாவ

# பாண்டியன் மகள்



போராக இருந்தாலும் வேகம் குறையாது போராடினர். அவர்கள் வீரத்தையும், அவர்களது செண்டுகள் பல சோழ வீரர்களைச் சாய்த்ததையும் கண்டு வியந்தான் காலிங்கராயன். இது ஒருபுறமிருந்தாலும், காலிங்கராயன் அகர கதியில் கழற்றிய

கத்தையும், செண்டாயுதத்தின் வேகத்தையும் அன்று பூரணமாகக் கண்டான் காலிங்கராயன். சேர வீரர்களுக்கு இது எதிர்பாராது ஏற்பட்டு விட்ட




வாளும், போரில் நீண்ட அனுபவத்தைப் பெற்றிருந்த சோழ வீரர்களின் அதிவேக வாள் வீச்சும் ரவிசேகரன் படையை வெகு விரைவில் நிர்மூலமாக்கின.

ஒரு சேர வீரனாவது புரவியை வந்த வழியே திருப்பாமலும், தப்ப முயற்சிக் காமலும் நிலத்தில் சரியும் வரை நின்று போராயடிதைக் கண்ட காலிங்கராயன், அந்த வீரர்களை மனதுக்குள் பாராட்டவும் செய்தான். கணவாயை அடுத்த சமவெளி யில் துவங்கிய அந்தப் போர், சற்று தூரம் வரை பாண்டிய மண்ணிலும் தொடர்ந்தது.

காலிங்கராயனின் வாள், மார்பில் ஆழப் பாய்ந்து விட்டதால் வி ழு ந் து கிடந்த ரவி சே க ர னும், புதர் களும் கற்க ளும் நிறைந்த அந்தப் பாதையெங்கும் விழுந்து கிடந்த சேர வீரர்களும் அன்று நடந்த வீராவேசமான போரை உணர்த்தி னர்.

அந்தப் போரின் நினைவாக அது முடி வுற்ற எல்லையிலிருந்த ஊர் ஒன்றுக்கு "வீர கேரளப் புதூர்" என்று பெயரும் சூட்டினான் காலிங்கராயன். கூடுமானவரை அந்தனை சேர வீரரையும் அங்கே புதைக்க உத்தரவிட்

டவன், அடுத்து, சேர நாட்டையும் வெற்றி கொள்ளப் போவதற்கடையாளமாக வெற்றித் தூண் ஒன்றையும் அங்கு நிறுத்தினான்.

அடுத்த நாளின் உதய நேரத்திற்கு முன்பே கிளம்பி விட்ட சோழர் படை, கணவாய்ப் பாதையை விடுத்து, வனப்பகுதியை ஊடுருவிய மலைப் பாதையொன்றில் ஏறிச் சென்று மறைந்தது.

பஞ்சுப் பொதிகளைப் போல மிதந்து வந்த மேகங்கள் மலையில் தவழ்ந்து கொண்டிருந்தன. காட்டு மலர்களும் ஏதேதோ மூலிகைகளும் சந்தன மரங்களும் கிளப்பிய மணம் அந்தப் பகுதியை நிறைத்திருந்தது. மனித சஞ்சாரமே அடியோடு அற்றுப் போய் விட்டதால் நரிகளும், முயல்களும், சர்ப்பங்களும் சுதந்திரமாக உலவிய அந்த அடர்ந்த வனப்பகுதியில் ஒற்றையடிப் பாதையொன்று வளைந்து வளைந்து சென்றது. எங்கோ வேங்கை ஒன்று பலமாக உறுமிய ஒலி எதிரொலித்துத் தேய்ந்தது.

மனித வர்க்கத்தின் பூசலையும் போரையும் அடியோடு வெறுத்து விட்டவர் போல அந்த அடர்ந்த வனத்தில், மலைச் சரிவில், சிறியதாக ஆனால் மிக நேர்த்தியாக வடித்த ஆலயமொன்றில் நின்று கொண்டிருந்தார் அனந்த பத்மநாப சுவாமி. அந்த வனத்திற்கும் பரந்த உலகிற்குமாக உயர்த்தி அபய ஹஸ்தத்துடன் சாதாரண நூலாடை ஒன்றை உடுத்திக் கொண்டு எளிமையாகக் காட்சி தந்தார்.

அந்த ஏகாந்தமான இடம் அவருக்குப் பெரும் திருப்தியளித்திருக்க வேண்டும். அவர் இதழ்களில் மலர்ந்திருந்த புன்னகை, அத்தனை ஆனந்தமாயிருந்தது. அங்கு வந்து செல்லும் பக்தர்களும் மிக அபூர்வமென்பதை அங்கு நிலவிய அமைதியே உணர்த்தியது.

சேவிப்பதற்கு எவருமற்ற அந்த ஆலயத்தின் மணி பெரிதாக ஒலித்தது. தொடர்ந்து கேட்ட நாமாவளியும் நிசப்தமான அந்த வனத்தை ஊடுருவியது.

சந்தியா காலப் பூஜை கிரமமாக நடந்து கொண்டிருந்தது. சாவதானமாகப் பூஜையை முடித்துக் கொண்டு வெளியே வந்த திருநாராயண பட்டரின் சிவந்த பெரும் ஆகிருதி, வியர்வையில் நனைந்திருந்தது. வெளியே வந்தவுடன் வீசிய குளிர்ந்த காற்றைச் சுகமாக நின்று அனுபவித்த திருநாராயண பட்டர், மீண்டும் திரும்பி அனந்த பத்மநாபனை ஒருமுறை சேவித்தார். நாராயண பட்டர் காத்து நிற்க, கதவுகளைப் பூட்டிக் கொண்டு வெளியே வந்த ஆலய பட்டர்,

''அடியேன் உத்தரவு பெற்றுக் கொள்கிறேன். நன்றாக இருட்டி விட்டால் பாதை தெரிவது சிரமம்'' என்றார் கரங்களைக் குவித்தபடி.

''நீங்கள் செல்லுங்கள். எனக்கு இங்கே சில பணிகள் இருக்கின்றன.'' என்றார் நாராயணபட்டர்.

ஆலயத்துப் பட்டரின் முகத்தில் திகில் பரவியது.

''இங்கு வேங்கைகளின் நடமாட்டம் சற்று அதிகம்'' என்றார்.

''மிக்க மகிழ்ச்சி.''

''சில சமயம் கள்ளர்களும் வருவதுண்டு.''

''இன்னும் விசேஷம்.''

''தங்களுக்கு ஏதும் ஆபத்து நேர்ந்தால்...?'' கேள்வி திகிலுடன் வந்தது.

திருநாராயண பட்டரின் முகத்தில் மந்தகாசம் விரிந்தது.

''வைகுந்தன் திருவுள்ளம் அப்படியென்றால் அதை மாற்ற நாம் யார்?' என்று சாவதானமாகப் பதிலளித்த நாராயண பட்டர், ஆலயபட்டரை விரைந்து திரும்பு மாறு கூறி விட்டு, அருகிலிருந்த மேடையொன்றை மேல் துணியால் இரண்டு தட்டு தட்டி விட்டு அமர்ந்து கொண்டார்.

அந்த மலைப் பகுதியில் மாலையிருள் விரைந்து கவியத் தொடங்கி விட்டதால் திருநாராயண பட்டரைத் திரும்பித் திரும்பிப் பார்த்தபடியே ஆலயத்துப்பட்டர், ஒற்றையடிப் பாதையில் மறைந்தார்.

பத்மாசனமிட்டு அமர்ந்து கொண்ட திருநாராயணபட்டர் கண்களை மூடி நிஷ்டையில் ஆழ்ந்து போனார்.

வேங்கைகள் உலவுவதாகக் கூறப்பட்ட அந்த வனப்பகுதியில் அவர் நிஷ்டையைக் கலைக்க வேங்கை எதுவும் வரவில்லை. ஆனால் வேங்கையை விடக் கூர்மையான விழிகளுடனும் நெடிய உருவத்துடனுமிருந்த சோழர் படைத்தலைவன் காலிங்கராயன் புரவியில் வந்து கொண்டிருந்தான்.

அவரை நெருங்கியதும் இறங்கி,

## அருள்வாக்கு

பிரபஞ்சத்தின் சகல ஆட்டத்துக்கும் காரணம் ஒரே ஒரு பராசக்திதான். அந்த ஒரே ஈசுவரனுடைய ஆக்ஞைப்படிதான் உலக இயக்கம் முழுதும் நடக்கிறது. அவன் பல விஷயங்களைச் சம்பந்தப்படுத்தி விடுகிறான். இந்த உலகத்தில் எதுவுமே தொடர்பில்லாமல் நடக்கவில்லை. நமக்குச் சம்பந்தமில்லாதவையாகத் தோன்றுவதை எல்லாம் உள்ளூரச் சம்பந்தப்படுத்தி, வேடிக்கை பார்க்கிறான் சர்வேசுவரன்.

ஒருவர் செய்கிற கர்மம், அதன் பலன் இவையே மனித வாழ்வின் சுக துக்கங்களுக்கு முதற்காரணம். இதற்கே துணைக் காரணமாக - அல்லது அடையாளமாக - கிரக சாரம், தெய்வ குற்றம், ஆரோக்கியக் குறைவு முதலியவை அமைகின்றன.

ஜாதக ரீதியில், வைத்திய ரீதியில், மாந்திரீக ரீதியில் எப்படி வேண்டுமானாலும் பரிகாரம் செய்து கொள்ளலாம். (தொடர்ச்சி இல்லை — பக்கத்தில் இவ்வளவே)



காரம் தேடிக் கொள்ளலாம். நம் கர்மா தீருகிற போது அவை பலன் தரும். பகவான் விட்ட வழி என்று பக்தியோடு நம் வாழ்க்கையை ஈச்வரார்ப்பணம் செய்து விட்டுப் பேசாமல் கிடக்கிற பக்குவம் இருந்தால், எல்லாவற்றையும் விட அது சிலாக்கியம். அதுவே பெரிய பரிகாரம்; உண்மையான பரிகாரம்.

பூர்வ கர்ம சமாசாரம் எப்படிப் போனாலும் இனிமேலாவது கர்மபாரம் ஏறாமல் பார்த்துக் கொள்வதே முக்கியம். பழையதற்குப் பரிகாரம் தேடுவதை விட, புதிய கர்மா சேராமல், பாவம் பண்ணாமல் வாழ்வதற்கு, ஈச்வரனைத் துணைகொள்வதே முக்கியம்.

பூர்வ கர்மத்தால் இப்போது ஏற்பட்டுள்ள துக்கத்துக்கும் உண்மைப் பரிகாரம் ஈச்வர தியானம்தான்; இனிமேல் துக்கத்துக்கு விதை போட்டுக் கொள்ளாமல் இருக்கிற உபாயமும் ஈச்வர தியானம்தான். துக்கம் தருவதாக இன்னொரு வஸ்துவே இல்லை என்ற அத்வைத அநுபவம் சித்திப்பதே இதன் முடிந்த முடிவான துக்க பரிகார நிலை. அங்கே துக்கமும் இல்லை; சுகமும் இல்லை; இரண்டுக்கும் ஆதாரமான சத்தியம் மட்டும் சுயம் பிரகாசமாக இருக்கும்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

வணங்கி நின்ற படைத்தலைவனைப் பட்டரின் குரல் விசாரித்தது :

''ரவிசேகரனை மலைக்கணவாயில் சந்தித்தாயா, காலிங்கராயா?''

''ஆம். உங்கள் உத்தரவுப்படியே முடித்து விட்டேன் குருதேவரே'' என்ற காலிங்கராயனின் குரலில் அசாத்தியப் பணிவு இருந்தது.

சிறிது நேரம் சிந்தனையில் மூழ்கிய பட்டர், மடியிலிருந்து ஓலையொன்றை எடுத்து நீட்டினார்.

ஆலய முகப்பிலிருந்த சிறு மாடத்து விளக்கை நாடிய காலிங்கராயன், அதன் ஒளியில் அந்த ஓலையைப் படித்ததும் அப்படியே சற்று நேரம் அசைவற்று நின்றான்.

ஓலையில் பொறிக்கப்பட்டிருந்த முத்திரையைக் கண்டதும் அவன் தலை ஒருமுறை தாழ்ந்து நிமிர்ந்தது. ஏதோ வேதபாடம் படிப்பவனைப் போல் ஓலையை மீண்டும் படித்த காலிங்கராயன், அதிலிருந்த இரண்டே வரிகளை மெல்ல உச்சரித்தான்.

''நாளை உதயத்தில் விழிஞத்தின் கிழக்கு வாயில் வழியாகத் தாக்குதலைத் தொடங்கு. பட்டர் விளக்குவார் - சமுத்திர பந்தன்'' அருகில் அழுத்தம் திருத்தமாகப் பதிந்திருந்த முத்திரை, அது அரச கட்டளை என்பதை அறிவித்தது. ஓலையைக் கச்சையில் செருகிக் கொண்டு மீண்டும் பட்டரை நெருங்கிய காலிங்கராயன்,

''குருதேவர் உத்தரவுக்குக் காத்திருக்கிறேன்'' என்றான்.

''நமது படையை இரண்டாகப் பிரித்து விடு.''

''உத்தரவு.''

''நான் ஒரு பிரிவுடன் சேரன் தலைநகரை நோக்கி இறங்குகிறேன்.''

''ஆகா!''

''நான் கிளம்புமுன் உன் படைப் பிரிவை அழைத்துக் கொண்டு உதயத்தில் விழிஞத்தின் கிழக்கெல்லையில் காத்திரு. துறைமுகப் பகுதியில் பெரும் தீ ஏற்படும். உடனே நீ தாக்குதலைத் தொடங்கலாம்.''

''விழிஞத்தின் துறைமுகத்தில் தீ எப்படி ஏற்படும்?''

பட்டரின் விழிகள் அவனை அர்த்த புஷ்டியுடன் ஏறெடுத்து நோக்கின. ''அரையன் மதுராந்தகன் அங்கிருக்கிறான்'' என்ற சொற்களும் அவரிடமிருந்து உதிர்ந்தன.

காலிங்கராயன் திகைத்து நின்றான். ஏற்கெனவே சமுத்திரபந்தன் என்ற பெயருடன் சேர நாட்டில் உலவியிருந்த மதுராந்தகன், ரவிசேகரனையும் பாண்டியரையும் தவறான தகவல்களைக் கொடுத்து ஏமாற்றியிருந்தான் என்பதும், இத்தனை நேரம் அவன் குட்டு உடைபட்டு அவனைச் சேர வீரர்களும் கங்காதரனும் தேடிக் கொண்டிருப்பார்கள் என்பதும் அவனுக்குத் தெரியும். இதனால் அரையனின் நிலை குறித்துச் சற்று அஞ்சவும் செய்தான் காலிங்கராயன்.

அவன் மனத்தில் ஓடிய எண்ணங்களைப் பட்டர் உணர்ந்திருக்க வேண்டும். ''அரையனைப் பற்றி அஞ்ச வேண்டாம் காலிங்கராயா. வைகுந்தன் அவனைக் காப்பார். நீ படைகளைப் பிரிக்க ஏற்பாடு செய்'' என்றார்.

ஏதோ சிந்தனையில் சற்றுத் தயங்கிய காலிங்கராயனின் கரம் கச்சையிலிருந்த ஓலையைத் தடவியது.

''மன்னர் எங்கிருக்கிறார் குருதேவரே?''

''கொட்டுந்தளத்தில்.''

''அப்படியானால்...'' என்று இழுத்தவனைப் பட்டரின் கரம் தேக்கியது. ''நாளை உதயத்தில் காந்தளூர்ச் சாலை, மன்னரால்



ஷோரூம் : காஞ்சி கோ-ஆப் சில்க்ஸ், உம்மிடியார்ஸ் ஷாப்பிங் சென்டர், அண்ணா சாலை, சென்னை.
பட்டுச் சங்கங்கள் : ஆரணி - ஆரணி சில்க்ஸ், கொசப்பாளையம் ● காஞ்சிபுரம் - காந்தி சாலை ; அறிஞர் அண்ணா, டாக்டர் கலைஞர் கருணாநிதி; காமாட்சி அம்மன்; காஞ்சி; முருகன்; பல்லவர்;

இனி நீங்களும் உங்கள் காஞ்சிப் பட்டுச் சேலையை டிசைன் செய்து கொள்ளலாம். 'கோவில்களின் நகர'த்திற்கு வந்து, பட்டு நெசவாளர் கூட்டுறவுச் சங்கத்தில், நிறத்தையும், கரையையும், தலைப்பையும் நீங்களே தேர்வு செய்யலாம்.

## எங்கள் பட்டில் சில அபூர்வப் பட்டு.
## மணமகளே டிசைன் செய்தவை அவை.

நாற்பதே நாட்களில், நீங்களே டிசைன் செய்த அபூர்வப் பட்டு உங்கள் வீட்டையும்!
அல்லது சென்னையில் காஞ்சிபுரம் கூட்டுறவுச் சங்கங்களின் ஷோரூமுக்கு விஜயம் செய்து, உங்கள் வாழ்நாள் முழுதும் பொக்கிஷமாகும் பட்டுப் புடவையை வாங்கிச் செல்லுங்கள்.

KANCHEEPURAM
SILK WEAVERS CO-OP SOCIETIES

**நூற்றுக்கு நூறு அசல்பட்டு. நூலுக்கு நூல் அசல்பட்டு.**

தமிழ்நாடு கைத்தறி மற்றும் ஜவுளித்துறை வெளியீடு. DIPR/739/DIS/93/HTA 7180/94

திருவள்ளுவர்; வள்ளலார்; வரதராஜசுவாமி • கும்பகோணம் - பேரறிஞர் அண்ணா, நந்தகோபாலர் தெரு • சேலம் - கொண்டாளம்பட்டி முருகன், கொண்டாளம் பட்டி; சேலம் சில்க்ஸ், 2-வது அக்ரஹாரம் • திருபுவனம் - திருபுவனம் சில்க்ஸ்.



# "இருள் சக்கரவர்த்தி"

சாதாரணமாக ஒய்.ஜி. மகேந்திரன் நாடகங்களில் கதை கொஞ்சம் கனமாக இருக்கும். இதில் கொஞ்சம் இளைத்திருக்கிறது.

வீடு காலி பண்ணச் சொல்லும் ஓனர். மறுக்கும் குடித் தனக்காரர்கள். அதனால் ஏற்படும் பிரச்னைகள். ஓனர் மகன், வாடகை வசூலுக்காக வருகிறவன், அவர்கள் அன்பில் கட்டுண்டு அப்பாவைத் திருத்தும் கதை.

ஓட்டை வீட்டு வர்ணிப்பில் ஒய்.ஜி. கையாண்டுள்ள உத்திகளில் மென்டல் கவிதைத்தனம். உதாரணமாக, குழாயைத் திறந்தால் ஆல் இந்தியா ரேடியோ திருச்சி கேட்பது.

பாரத விலாஸ் மாதிரி ஒரு சிங், ஒரு கிறிஸ்துவர், ஒரு முஸ்லிம், ஒரு நடித்து என்பதான செட்-அப்கள் கதைக்கு அனாவசியம். அதுவும் அந்த சிங் - சிங் மாதிரியே இல்லை; குடுகுடுப்பைக்காரன் மாதிரி!

இன்டர்வெல் வரை சுவையென்று போகிற கதை, சட்டென்று சிரிப்பை அடைந்தால் காய்ந்த கோந்து மாதிரி, ஒட்ட கொஞ்சம் லேட்டாகிறது. தவிரவும் அந்தக் 'குடித் தனக்காரர்கள் தின விழா'வெல்லாம் அனாவசிய நீட்டல்.

நாடகம் முழுக்க வருபவர்கள் மகேந்திரனும் கப்புணியும். அரைகுறை திருநெல்வேலித் தமிழ் பேசிக் கொண்டு, கதர் சட்டை வேட்டியில் ஒய்.ஜி. அனாயாச அசத்தல். ஆனால் மௌனங்களில் அத்தனை செயற்கைத் தனம் அவசியமேயில்லை.

குள்ள கப்புணி என்னமாய்த் துள்ளுகிறார்? வீட்டு ஓனரின் ஏஜெண்டாக, ஒய்.ஜி.யிடம் அவர் சத்தாய்க்கிற இடங்கள் ஹஹஹஹா ஸ்பெஷல்.

இன்னும் அநேக கேரக்டர்கள் இருப்பினும் இவர்கள் இருவரும் அடிக்கிற லூட்டியில் அத்தனை பேரும் அம்பேல்.

அன்றைய காட்சி, பூகம்ப நிதி வசூலுக்காகப் போட்டிருந்தார்கள். ஆகவே ஆங்காங்கே தென்பட்ட குறைகள் பெரிதும் மன்னிக்கப்படுகின்றன.

— கிச்சா

தாக்கப்படும்'' என்றார்.

மூன்று கோணங்களிலும் சேர நாட்டைத் தாக்கும் சோழப் படையை இனி சேரலாதன் என்ன முயன்றாலும் வெற்றி கொள்ள இயலாதென்பதையும், இனி சேரன் சிற்றரசனாக ஆக்கப்படுவான் என்பதையும் திட்டவட்டமாக உணர்ந்த காலிங்கராயன் முகத்தில் வெற்றிக் களிப்பு படர்ந்தது.

''இந்தத் திட்டத்தை வகுத்தவர் தாங்கள் தானே?'' அவன் கேள்வி மிகப் பணிவோடு வந்தது.

''இல்லை'' பட்டர் உறுதியாக மறுத்தார்.

காலிங்கராயன் விழிகள் வியப்பில் விரிந்தன.

''வேறு யார்? மன்னரா?''

பட்டர் முகத்தில் முறுவல் விரிந்தது. ''மன்னரும் இல்லை. எனது சீடன். உன் உபதலைவன். அரையன் மதுராந்தகன்.''

காலிங்கராயன் பலமாக நகைத்தான். அந்த அமைதியான வனப் பகுதியில் அவன் நகைப்பு எதிரொலித்துத் தேய்ந்தது.

''இதில் நகைப்பதற்கு இடமில்லை காலிங்கராயா! திட்டம் மன்னரால் இரு வாரங்களுக்கு முன்னரே ஒப்புக் கொள்ளப் பட்டது'' என்றார் பட்டர்.

காலிங்கராயன் வாயைப் பிளந்தான். ''இரு வாரங்களுக்கு முன்னதாகவா? நான் இங்கு வருவேன் என்பது இரண்டு நாட்களுக்கு முன்பு வரையிலும் கூட எனக்கே தெரியாதே!''

''மலைக்கணவாயில் நீ ரவிசேகரனை எதிர்கொள்ள ஏற்பாடு செய்தவன் அரையன். அதன் பிறகு நீ இங்கு வர ஓலை அனுப்பியது நான்.'' - பட்டர் விளக்கினார்.

திருநாராயணபட்டரின் சீடன், போர்த் திட்டங்களை வகுப்பதில் குருவையும் விஞ்சி விட்டதையும் கச்சிதமான அந்தத் திட்டத்தால் சேர நாட்டை மூன்று முக்கிய நிலைகளில் தாக்க ஏற்பாடுகள் செய்திருந்ததையும் கண்ட காலிங்கராயன் வியந்தான். போரிலேயே வாழ்க்கையின் பெரும் பகுதியைக் கழித்திருந்த படைத் தலைவனுக்கு இத்தகைய வீரனைச் சாளுக்கியப் போரில் முழுதுமாகப் பயன்படுத்திக் கொள்ள இயலாமற் போனது குறித்துச் சற்று ஆதங்கமும் ஏற்பட்டது.

அடுத்த ஒரு ஜாமத்தில் அந்த வனப் பகுதியிலிருந்த சோழப் படை இரண்டாகப் பிரிந்து அணிவகுத்தன.

பட்டரிடம் விடைபெற்ற காலிங்கராயன், தன் படைப் பிரிவுடன் விழிஞத்தை நோக்கி நகர்ந்தான்.

சேர நாட்டை விழுங்க வரும் பெரும் சர்ப்பங்களைப் போல் இரு படைப் பிரிவுகள் அந்த வனப்பகுதியிலிருந்து கிளம்பி ஊர்ந்தன.

உதயத்தில் விழிஞத்தின் கிழக்கு எல்லையில் படைகளை நிறுத்திய காலிங்கராயன், துறைமுகம் தீப்பற்றி எரியும் அடையாளத்திற்காகக் காத்திருந்தான்.

(தொடரும்)

# இடைவெளி

வெளியே பலத்த குரல்கள். ''ஜனகம், ரெண்டு சாத்துடி அதை. எப்பப் பாத்தாலும் கையைக் காலை அசைச்சிண்டு. பூத்தொடுக்கலாம்னு உள்ள போயி நாரை எடுத்துண்டு வர்றதுக்குள்ள, பூவையெல்லாம் பிடிச்சி ஒரு வழி பண்ணியாச்சி.''

''அதுக்கென்ன தெரியும்மா? நாலு வயசுதானே ஆறது? எல்லாம் மன்னியால வர்றது. கதவைச் சாத்திண்டு பொழுதாலும் டான்ஸ் கத்துக் கொடுக்கறா. பெரியவாளைச் சொல்லணும். புத்தி கெட்டதுகள். இப்பவே மைதிலி டான்ஸ் கத்துண்டு, பெரிய பத்மா சுப்ரமணியமாட்டமா வரப் போறான்னு அவாளுக்கு ஒரு நெனப்பு.''

முகம் அலம்பிக் கொண்டிருந்த பட்டுவின் கண்களில் சோப்பு பட்டு எரிச்சல் அதிகரித்தது. அந்த எரிச்சலை விட, மாமியாரும் நாத்தனாரும் படுத்துகிற பாடு வீட்டையே ரெண்டு பண்ணிற்று. இது இத்தோடு முடியாது. அவர் வருகிற வரையில் பொறுமும். அவர் வந்ததும் உறுமும். அவர் வந்து ''அம்மாவுக்குப் பிடிக்காததை செய்யாதேன்னா விட்டுடேன். ஏன் இப்பிடி வாங்கிக் கட்டிக்கறே? வர வர நிம்மதியே இல்லாமப் போயிடுத்து'' என்று தன் பங்குக்கு வார்த்தைகளில் சூடு போடுவார்.

எல்லாம் பழகி விட்டது. அரியர்ஸ் எழுதி எழுதி அலுத்துப் போன மாணவனுக்கு எப்படி யூனிவர்சிட்டியும், காலேஜ் விவகாரங்களும், எக்ஸாமினர்களின் அப்ரோச்சும் பழகிப் போய் செக்குமாட்டுத்தனமாய்ப்படுமோ, அப்படி பட்டுவின் பத்தாண்டு தாம்பத்யம் அவளுக்கு அதற்குள்ளாகவே அலுக்கத் தொடங்கி விட்டது.

வாய் திறக்க மாட்டாள். வாய் திறக்கக் கூடாது. அவருக்கு அம்மாவே தெய்வம். எல்லாம் தலைவிதி என்று தள்ளி விட்டு விட முடியவில்லை. வர வர மனசு ரகளை பண்ணிற்று. நாக்கு எதிர்த்துப் பேச ஆசைப் பட்டது. நிறையவே பெண்கள் வீட்டுக்குள்ளாகவே வெந்து தணிகிறார்கள்.

மைதிலி அழுது கொண்டே ஓடி வந்தது. ''அம்மா, அத்தை முதுகுல நல்லா கிள்ளி அடிச்சுட்டா. முதுகு எரியறது!'' மைதிலி அழுது கொண்டிருந்தாள்.

கவுனைக் கழற்றி முதுகைப் பார்த்தாள் பட்டு. அஞ்சு விரல்களும் அப்படியே பதிந்து போய்... ஜனகம் கல்யாணமாகி இருபது வருஷங்களாகியும் இன்னும் கருத் தரிக்கவில்லை. பட்டு வந்ததும் வராததுமாய் வளைகாப்பு, சீமந்தம் என்று ஒன்பது



மாதங்களுக்குள் பெரியவன் ஈஸ்வரைப் பெற்று, அடுத்த அஞ்சு வருஷங்களுக்குள் மைதிலியையும் பெற்றெடுத்து விட்டாள். தனக்குக் கிடைக்காதது அடுத்தவர்களுக்குக் கிடைக்கும் போது, மற்ற விஷயங்களில் பொறாமை சகஜம். அது மனித இயல்பு. ஆனால் குழந்தை விஷயத்திலுமா?

அத்தை, தாயாக மாற வேண்டாம். அத்தையைப் போலாவது நடந்து கொண்டிருக்க வேண்டாமா? ஜனகம் வயிறு எரிந்தாள். எப்போதும் எரிவாள். அப்படி அவள் எரியும்போதெல்லாம் குழந்தைகளின் கன்னம், முதுகு, தொடை எரியும்.

ஜனகத்திற்கு மாமியார் வீடென்று தனியே ஏதுமில்லை. தாய் மாமனையே பதினேழு வயசில் தன் அம்மா சொல்படி கல்யாணம் செய்தவள். சமயத்தில், பட்டுவிற்குக் கூட ஜனகத்தின் மேல் பரிதாபம் வரும். தன் தாய், கணவன், சகோதரன் இந்த மூன்று பேரைத் தவிர வேறு போக்கிடம் அவளுக்கு ஏது? குழந்தைகள் என்று ஏதாகிலும் பிறந்திருந்தால், அவளுக்கு இயல்பாய்ப் போய் விட்ட ரௌத்திரம் அடங்கிப் போய் அவளும், படபடப்பு இல்லாமல் கல்மிஷம் இல்



லாமல் கோபம், எரிச்சல், பொறாமை இப்படி எதுவுமேயில்லாமல் சாத்வீகமாய் இருந்திருப்பாள். தினமும் நிறைய சின்னச் சின்ன சில்மிஷங்கள் செய்வாள். எல்லாமே வேறு ஒரு உலகத்தை கற்பனையில் சிருஷ்டித்து, அங்கே தான் சுகமாய் இருக்கும்படியான கனவுகளின் கணம் பிடிபடாமல் போனதால் தான்.

ஜனகத்தை சமாளிப்பதே பட்டுவிற்கு முதல் வேலையாய் இதுகாறும் இருந்து வந்திருக்கிறது. இப்போதெல்லாம் இதிலிருந்து விடுபட்டுப் போய் தனியாய் - தான், தன் கணவன், தன் குழந்தைகள் அவர்களின் எதிர்காலம் என வாழ ஆசை வந்தது. அவரிடம் இதைச் சொன்ன போது, ''உளறாதே பட்டு. அம்மாவுக்கோ, ஜனகத்துக்கோ நம்மள விட்டா வேறே யாரு இருக்கா? தப்புச் செய்யாதவாளே கிடையாது. தப்புச் செய்யறோம்ற உறுத்தலோடயே அக்கா தப்பு செஞ்சிண்டு இருக்கா. சில நேரங்களில் அவ வசம் அவளே இருக்கறதில்ல. ஏதாவது நல்ல சைக்கியாட்ரிஸ்ட் கிட்டக் கூட அவளைக் கூட்டிண்டு போகலாம்னு என் மனசில எண்ணம் வர்றது. இன்னொரு பக்கம், உன் தொணதொணப்பாலதான் நானே இல்லாத ஒன்னை கற்பனை செஞ்சிக்கிறேனோன்னு கூட படுது. மனசங்கறது, நூலிழையாட்டமா. அதை அறுபடாம கடைசி வரை வெச்சிக் காப்பாத்தணும்.''

மைதிலியை சமாதானப்படுத்துவதற்குள் போதும் போதுமென்றிருக்கிறது பட்டுவுக்கு. ''மன்னி, இங்க வாங்கோ. இன்னுமா அழுதுண்டு இருக்கா அவ? சும்மா ஒன்னு கொடுத்தேன், அதுக்கே ஊரைக் கூட்டறாளே!''

பட்டு போய் ஜனகத்திற்கு முன்னால் கசப்பாய் நின்றாள். ''சும்மா ஒன்னு கொடுத்தேன்னு சொல்றேள். பாருங்கோ, உங்க அஞ்சு விரலும் பதிஞ்சு போச்சு. நீங்க மைதிலிக்கு அத்தையா, இல்ல ராட்சசியா?'' என்றெல்லாம் பேச, கோபம் தலைக்கேறிற்று.

'அவர்' முகம், கூடவே ஞாபகம் வந்தது. இது குடும்பம். இதன் அமைதிதான் என்றுமே முக்கியம். என் குழந்தையை நீ எப்படி அடிக்கலாம் என்ற தன்னலம் பார்த்தால்... முடிவு அவஸ்தைதான். விடிந்தால் ஒருத்தர் முகத்தில் ஒருத்தர் விழிக்க முடியாது. சகஜமாய் நாலு வார்த்தை பேச முடியாது. முகத்தோடு மனசும் இறுகி வதைபட நேரும்.

''மன்னி, உங்களுக்குப் பிடிக்குமேன்னு முல்லைப் பூ வாங்கித் தொடுத்தேன். அதைப் போய், டான்ஸ் ஆடிண்டே பிச்சி ஒரு வழி பண்ணிட்டா உங்கப் பொண்ணு. பொண் குழந்தை பூவை பிடிக்கலாமா? பெரியவாதான் நாலு நல்லதை எடுத்துச் சொல்லணும். திரும்புங்கோ, பூ வெச்சி விடறேன்''

பட்டு திரும்பினாள். தன் அறைக்குப் போய் தா, தை, தா, தை என்று ஜதி சொல்ல ஆரம்பித்தாள். மைதிலி கால்களால் பேசுவாள். பட்டு அரங்கேற்றம் வரை போயிருக்கிறாள். எல்லாம் அவள் அப்பா கற்றுக் கொடுத்தது. நாட்டிய மேதை என்கிற புகழ்

பா.தீனதயாளன்

இருந்த அளவு வறுமையும் இருந்தது. போய்ச் சேர்ந்து விட்டார். பட்டுவிற்குள் முளைத்த 'மாபெரும் பரதநாட்டியக் கலைஞர்' என்கிற கனவு, அப்பா போன துக்கத்தில் எழுந்த அழுகையில் கரைந்து போனது.

**வா**சலில் ஸ்கூட்டர் சப்தம். அவர் வந்து விட்டார் போலிருக்கிறது. மைதிலி கதவைத் திறந்து கொண்டு ஓடுகிறது. ''அப்பா, அத்தை அடிச்சிட்டாளே சாயங்காலம். இன்னமும் வலிக்கறதுப்பா. ஏன், என்னையே எப்பப் பாத்தாலும் அடிக்கிறாப்பா? அடிக்காதே ஜனகம்னு சொல்லுங்கப்பா. அத்தை கூட டூ விட்டுடுங்கப்பா.''

நெல்லிக்காய் மூட்டையை அவிழ்த்துக் கொட்டினாற்போல் மைதிலி நொடிகளுக்குள்ளாகவே படபடவென்று பொரிந்து தள்ளுகிறாள், அவள் அத்தையாட்டமாய். பட்டு சிதறிப் போய் வாசலுக்கு விரைகிறாள். ''தப்பு மைதிலி. பெரியவாளைப் பத்தி தப்பா பேசப்படாது. அத்தை உன் நல்லதுக்குத்தான் அடிக்கிறா? பூவை பிடிச்சது தப்பில்லயா?''

''நன்னாருக்கு போ. புள்ளையையும் கிள்ளி விட்டுட்டு, தொட்டிலையும் ஆட்டுற மாதிரி - குழந்தைகிட்ட கண்டதையும் சொல்லிக் கொடுத்துட்டு, சபையில சொல்லாதேன்னா எப்பிடி? நன்னா அடிச்சி வளக்கற குழந்தைதான் உருப்படும். பெத்தவ நீ கண்டிக்கறதில்லைன்னு, அத்தை நான் கண்டிக்கிறேன். இங்க வாடி, அப்பா உள்ள வந்ததும் வராததுமா இப்பிடி அழுது காட்டுவியா? தோலை உரிச்சிடுவேன்'' என்று ஜனகம், மைதிலியின் தலையில் குட்டுகிறாள்.

அவர் பாய்ந்து வந்து, ஜனகத்தின் கையைத் தட்டி விட்டு - ''இனிமே எங் குழந்தை மேலே கையை வெச்சே... கையை வெட்டிடுவேன் பார்த்துக்க! அது குழந்தை. அதுக்கு என்ன தெரியும்? போனாப் போறது அக்காவாச்சேன்னு நாளை ஓட்டிண்டு போனா, நீ எங்குழந்தையை அடிச்சே கொன்னுடுவே போலிருக்கே. ஏய் பட்டு, இனிமே குழந்தையை இந்த ராட்சஸிகிட்ட விடாதே. இவளுக்குப் பைத்தியம். தனக்குக் குழந்தை பொறக்கலியேன்னு வெறி, ஆத்திரம்... வேணாம், இனிமே நாம இங்கிருக்க வேணாம். சீக்கிரமே வேறே இடம் பார்த்துப்போம்.''

**எ**ல்லாமே நொடி நேரத்தில் நடந்து முடிகிறது. பெண் பொறுமையோடும், சகிப்புத்தன்மையோடும் காலகாலமாய்க் கட்டிக் காத்து வந்த குடும்பத்தை ஆண் சில வினாடிகளில் சீரழித்து விடுகிறான்.

ஜனகம் சிலையாய் நிற்கிறாள். அம்மா நடந்ததெல்லாம் நிஜமா என்கிற பிரமிப்பில் நிற்கிறாள். மாமாவின் பார்வை நிமிரவே இல்லை. தலைகுனிந்தபடியே வெளியே போகிறார். 'அவர்' எல்லாம் பேசி விட்டு, மைதிலியைத் தூக்கிக் கொண்டு உள்ளே போகிறார்.

**எ**ப்போதுமே ஆர்ப்பாட்டமாய்ப் போகும் இரவு, மயான அமைதியில் கழிகிறது. பட்டு மனசு கேளாமல் அவரைக் கேட்கிறாள் ''அவசரப்பட்டுட்டீங்களே.''

அவர் நிதானமாய்ச் சொன்னார். ''திருப்தியா பட்டு? இதுக்குத்தானே ஆசைப்பட்டே!''

பட்டுவிற்கு வியர்த்துப் போகிறது. பேச நா எழவில்லை. விடிகிற போது வீட்டில் இவர்களைத் தவிர, யாரையும் காணோம். பட்டுவுக்கு பதறத் தோன்றவில்லை. அவள் பதறினாலும் அதை நிஜமென்று அவர் நம்பப் போவதுமில்லை. அவர்கள் போய் விட்டிருந்தார்கள். கோல மாவு டப்பாவுக்குப் பக்கத்தில் நாலாய் மடிக்கப்பட்ட வெள்ளைத் தாள். கடிதம். பட்டு பிரித்துப் படித்தாள்.

''அன்புள்ள பட்டு மன்னிக்கு,

நாங்கள் கிளம்பி விட்டோம். உன் புருஷனிடம் சொல். நான் பெறாதவள். சகோதரனின் குழந்தையை நானே பெற்று விட்டதாய் இதுகாறும் இறுமாந்து கிடந்தவள். தாயைத் தவிர, குழந்தைகளை வேறு யார் கைநீட்டி அடித்தாலும் என் நிலைதான் போலும். நம் சமூகம் பிள்ளைகளுக்கு உணவு கொடுத்து வளர்ப்பதை விட, கனவு கொடுத்து வளர்த்து, பின் காவு கொடுப்பது தான் இயல்பு. நான் இயல்பை மீற நினைத்தேன். இன்று சறுக்கி விழுந்திருக்கிறேன்.

மன்னி, நீயும் கனவு கண்டவள். உன் பரதக் கனவு என்னாயிற்று கடைசியில்? கிண்டலுக்குச் சொல்லவில்லை... என் அப்பா உயிரோடு இருந்தவரையில் நான் நர்ஸாக வர வேண்டுமென்றும், உன் புருஷன் டாக்டராய் வர வேண்டுமென்றும் இங்கிலீஷ் கான்வென்ட்டில் படிக்க வைத்தார். அப்பாவோடு கல்வி போகும் என்பார்கள். எங்கள் குடும்பத்திலும் போயிற்று. குழந்தையிடம் கனவுகளை மட்டும் வளர்க்காதீர்கள். நிஜங்களைச் சந்திக்கத் துணிவையும் தைரியத்தையும் வளருங்கள்.

நான் மைதிலியை அடித்ததன் காரணம் இயலாமைதான். அவள் பரதம் கற்றுக் கொள்வதை நான் தவறு சொல்லவில்லை. ஆனால் பரதம் மட்டுமே வாழ்க்கை இல்லை அல்லவா? மற்றபடி உங்கள் இஷ்டம். நாங்கள் கிளம்பி விட்டோம். இந்த இடைவெளி நல்லதுக்குத்தான். மறுபடி எப்போது வருவோம் என்று சொல்ல முடியவில்லை. எங்களுக்கும் இதை விட்டால் வேறு போக்கிடம் ஏது?

அன்புடன்,
ஜனகம்

பட்டுவுக்கு ஏதேதோ புரிந்தது போலிருந்தது.


இதுவொரு அறுசுவை அற்புதம்!
இனிய சமயற்கலையின்
இலக்கணம்!
SMB மைதா, ரவை மற்றும்
கோதுமை மாவுகள்
இல்லத்தரசிகளே! உங்கள் நளபாகக் கலையின் நவரசங்களையும் நளினமாக வெளிப்படுத்த SMB உதவுகிறது.
• நவீன, சுகாதாரமான முறையில் தயாரிக்கப்படுகிறது.
• என்றென்றும் நியாயமான விலை.
• 1 கிலோ மற்றும் 1/2 கிலோ பாக்கெட்டுகளில் புத்தம்புதிய அழகிய பாலிதீன் பைகளில் கிடைக்கிறது.
SMB-யை மறக்கமாட்டேன்! வேறு எதையும் வாங்கமாட்டேன்!!
தயாரிப்பாளர்கள்
SMB
சக்தி முருகன் ரோலர் ப்ளவர் மில்ஸ்
த.பெ.எண் 15, அவினாசி, கோவை மாவட்டம்
போன்: 2378, 2618

# ராமகிருஷ்ணா ஸ்வீட்ஸ்

**நெ. 31, புரசைவாக்கம் நெடுஞ்சாலை,**
**சென்னை - 600 007. போன் : 6426507.**

இனிப்பு வகைகள் : பாதாம் அல்வா, கோதுமை அல்வா, ஜாங்கிரி, ரஸமலாய், ரஸகுல்லா, மங்களூர் போளி, சோன்பப்டி.

கார வகைகள் : மிக்சர், முந்திரி பக்கோடா, சீடை, மிளகு வடை, தட்டை, தேன்குழல், வெஜிடபிள் சமோசா, கைமுறுக்கு, அதிரசம்.

மேற்கண்ட இனிப்பு, கார வகைகளை மிகவும் நல்ல முறையில் தரமான பொருட்களைக் கொண்டு ருசியுடன் தயாரித்து வழங்குகிறோம்.



## ராமகிருஷ்ணா குரூப் ஆப் ஸ்வீட்ஸ்,

புரசைவாக்கம்,

*கிளைகள் : 29, பைகிராப்ட்ஸ் சாலை, திருவல்லிக்கேணி.*
*7, சர்தார் பட்டேல் ரோடு, அடையாறு..*
*142, ஆற்காடு சாலை, வடபழனி (100 அடி சாலை அருகில்).*

*தேவீர் விருந்து, மற்றும் பார்ட்டிகளுக்கு ஆர்டரின் பேரில் சப்ளை செய்யப்படும்.*

*மேலும் கேஷ்யூநட் சுந்திலி, மோதிபாக், சம்சம், செம்பகலி, மேங்கோ, பெங்காலி சுவீட்ஸ், ஸ்பெஷல் மில்க் சுவீட்ஸ், சோன் அல்வா, அனைத்து ஸ்வீட்களும் நல்ல முறையில் செய்து தரப்படும்.*

# காஸ் ஸ்டவ் பயன்படுத்துவோர் கவனத்திற்கு!



உங்கள் வீட்டு காஸ் ஸ்டவ் தொல்லைகள் தருகிறதா? ரிப்பேர் ஆகிவிட்டதா? கவலை வேண்டாம்!

எங்களை அழைக்கவும்

**Ph: 483 09 66**

எல்லா வகையான காஸ் அடுப்புகளும், வெளிநாட்டு ஸ்டவ்கள் உட்பட ரிப்பேர் செய்யவும், பழுதடைந்த பாகங்களை புதிதாக மாற்றவும், பிசுக்கு நீக்கி சுத்தம் செய்யவும், புதிதாக ஸ்ப்ரே பெயின்டிங் (நீங்கள் விரும்பிய வண்ணங்களில்) செய்யவும், குரோமியம் பிளேட்டிங் செய்யவும், ஸ்டெயின் லெஸ் ஸ்டீல் ஸ்டவ் பாலிஸ், பெட்ரோல் ஓவர் ஆயிலிங் செய்யவும், திருமணம் மற்றும் விசேஷ வைபவங்களுக்கு பெரிய காஸ் ஸ்டவ் வாடகைக்குப் பெறவும்

# கவனம் தேவை

காஸ் ஸ்டவ் மெக்கானிக் & சர்வீஸ் ஷாப்

**140, ரங்கராஜபுரம் மெயின் ரோடு, கோடம்பாக்கம், சென்னை-24.**

கிளை: 7/8, கஸ்தூரிபா நகர், 3வது குறுக்குத் தெரு, அடையார், சென்னை-20.

ரிப்பேர் செய்ய தங்கள் ஸ்டவ்வை எடுக்கும்போது
உடனடி உபயோகத்திற்கு மாற்று காஸ் ஸ்டவ்வும் தருகிறோம்.

# முதல்வர் பங்கேற்கும் விழாக்களை எளிமையாக்க முடியாதா?



● நோபெல்



● ...பரிசு



● மறுமலர்ச்சிக் கழகம்?



● கற்பனையையில்...

● ஆர். பாலு, திருச்சி.

*? மண்டேலாவுக்கு அமைதிக்காக நோபெல் பரிசு வழங்கியுள்ளது குறித்து?*

! மண்டேலாவுக்கு மட்டுமல்ல; கால் நூற்றாண்டு சிறைவாசத்துக்குப் பின் அவரை விடுதலை செய்த தென் ஆப்பிரிக்க அதிபர் டி. கிளார்க்குக்கும் சேர்த்துத்தான் நோபெல் பரிசு. வன்முறை வழிகளை விட, அமைதி வழியே பிரச்னைகளைத் தீர்க்கும் என்று இவர்கள் இருவரும் நம்புவதே காரணம்.

● பி. கப்புலக்ஷ்மி, கரையிருப்பு.

*? முதல்வர் கலந்து கொள்ளும் விழாக்களை எளிமையாக்க முடியாதா?*

! ஊரெல்லாம் கட்அவுட் வைத்து, வழி நெடுக வரவேற்பு வளைவு அமைத்து, சுவர் முழுக்க போஸ்டர் ஒட்டி, பழ அலங்கார மேடை கட்டி, தங்குமிடத்தில் சலவைக் கல் பதித்து - ஏஸி செய்து, ஸ்பெஷல் விமானத்தில் வரும் அவரை மலர் தூவி வரவேற்கிறார்கள். இவ்வளவுதானே, இதைவிடச் சிம்பிளாக எப்படியம்மா வரவேற்பது?

● வைத்யா, திருவெண்ணெய்நல்லூர்.

*? கருணாநிதி பொதுக் குழுவைக் கூட்ட ஏன் மறுக்கிறார்?*

! பொதுக் குழு கூட்டத்தில், சிலர் சட்டை கிழிந்து போய் விட்ட பழைய கதையை நினைத்துப் பார்க்கிறாரோ என்னமோ!

● பி. நூர்தீன், வலங்கைமான்.

*? ரஷ்ய அதிபர் யெல்ட்சின் நிலைமை எப்படி?*

! எதிர்ப்பு பலமாக இருந்தாலும் அதைத் தாக்குப்பிடிக்கும் திராணியும் வலிமையும் அவருக்கு இருப்பதாகவே தோன்றுகிறது.

● ஆர். நாகராஜன், பொள்ளாச்சி.

*? "ஏகவிடம் கேட்டால்தான் கிடைக்கும்; ஜெ. விடம் கேட்காமலே கிடைக்கும்" என்று அமைச்சர் ஜனார்த்தனம் கூறியிருக்கிறாரே?*

! இப்படி உளறிக் கொண்டிருந்தால் ஜனார்த்தனம் கேட்டாலும் கிடைக்காது கிறிஸ்துவர்களின் வோட்டு.

● ஈ.டி. விஜயகுமார், ஈரோடு.

*? சமீபத்தில் தங்களை மகிழ்ச்சி அடைய வைத்த சம்பவம்?*

! 'சுருதி' மாதப் பத்திரிகை பத்தாண்டு நிறைவு விழா கொண்டாடியதுதான். முழுக்க முழுக்க சாஸ்திரீய இசை - நடனத்துக்காகவே நடத்தப்படும் பத்திரிகை இந்த அளவுக்கு வெற்றி கண்டது பாராட்டுக்குரியது.

● அ. சோ. விஸ்வநாதன், காட்பாடி.

*? 'தர்மத்தை எடுத்துச் சொல்பவனுக்கு வாய்ப்பூட்டு போட முடியாது' என்று பதிலளித்துள்ளீர்களே, சேஷன் பற்றிய கேள்வியில். சேஷனின் ஒவ்வொரு சொல்லும் செயலும் தர்மத்துக்கும் நியாயத்துக்கும் உட்பட்டுத்தான் நடக்கிறதா?*

! தலைமை தேர்தல் கமிஷனர் என்ற முறையில் அவர் எடுத்த முடிவுகளில் 99.9% தர்ம நியாயத்துக்குட்பட்டதுதான் என்றே அரசியல் சார்பற்றவர்கள் கருதுகிறார்கள். இதனால்தான் அரசியல்வாதிகளுக்கு அவர் மீது அத்தனை கோபம் வருகிறது.

● ஆர். இளமாறன், சீர்காழி.

*? நாட்டில் எவ்வளவோ நல்ல விஷயங்கள் இருக்க, நடிகைகள் திருமணத்தைப் பெரிது படுத்துவது ஏன்?*

! வேறு எத்தனையோ நல்ல கேள்விகள் கேட்கப்படக் காத்திருக்க, நீங்கள் இப்படியொரு கேள்வியைத் தேர்ந்தெடுத்தது ஏன்?

● எம். குணசேகரன், வேலாயுதம்பாளையம்.

*? காங்கிரசுடன் உறவை மீண்டும் ஏற்படுத்திக் கொள்ள ஜெயலலிதா பகீரதப் பிரயத்தனம் செய்வதாக வாழப்பாடி கூறுகிறாரே?*

! அதென்னமோ ஜெயை விடவும் மிகுந்து பத்திரிகைதான் அ.தி.மு.க. - இ.காங்கிரஸ்



● "கிராமசி பட்டோ"



● தேடுவது எதை?

கூட்டுக்கு அதிகப் பிரயத்தனப்படுவது போலத் தோன்றுகிறது - அது செய்தி வெளி விடும் விதத்தைப் பார்க்கும் போது. நரசிம்மராவின் சமீப சென்னை விஜயம் இவ் விஷயத்தில் பூஜ்யமாகிப் போனதில், ஏமாற்றமும் அந்தப் பத்திரிகைக்குத்தான் அதிகமாக இருப்பது போல் முதல் பக்கச் செய்தி தொனிக்கிறது.

● எம். பிரபு, குமராட்சி.

*? இப்போதுள்ள அரசியல்வாதிகளில் 22 ஹீரோ யார்?*

! பல்வேறு கட்சிகளில் உள்ள அடிமட்டத் தொண்டர்கள்.

● மு. இரவிச்சந்திரன், சேலம்.

*? 'காட்டில் மூங்கில் மரங்கள்தாம் இருக்கின்றன. சந்தன மரங்கள் ஒன்று கூட இல்லை' என்கிறாரே, தேவாரம்?*

! அவர் தேடுவது வீரப்பனையா? சந்தன மரங்களையா?

● ஆர். விஜி, அரகண்டநல்லூர்.

*? '' 'ஜெ' அல்லாத அ.தி.மு.க.வுடன் உறவு கொள்ளத் தயார்!'' என்று வாழப்பாடியார் கூறியுள்ளாரே?*



● சிம்பிள் வரவேற்பு!



● ஏன் மறுப்பு?

! ஜெ. இல்லாத அ.தி.மு.க. என்று ஒன்று, வாழப்பாடியார் கற்பனையில்தான் உள்ளது.

● ப. இராம்முருகன், சிவகங்கை.

*? கலைஞர் - வை. கோவுக்காக தி.மு.க. தொண்டர்களின் நீக்குவிப்பு எதைக் காட்டுகிறது?*

! அவர்களின் அறியாமையை.

● அபர்ணா அலமேலு, ஈரோடு.

*? சமீபத்தில் ரசித்துப் படித்த புத்தகம்?*

! ''பொன்னியின் புதல்வர்'' என்ற தலைப்பில் 900 பக்கங்களில் அமரர் கல்கியின் வாழ்க்கை வரலாற்றை நிகரற்ற விதத்தில் அற்புதமாக எழுதிய ''சுந்தா'', "KALKI A LIFE SKETCH" என்ற தலைப்பில் ஆங்கிலத்தில் 161 பக்கங்களில் ரத்னச் சுருக்கமாகவும் ஒரு வாழ்க்கை வரலாற்றை அளித்திருக்கிறார் - அகஸ்தியர் காவிரியைக் கமண்டலத்தில் அடக்கியது போல்! படிக்க ஆரம்பித்து விட்டாலோ அந்தச் சரித்திர நாயகன், அகண்ட காவேரி போல் நம் கண்முன் விசுவரூபமெடுத்து நிற்கிறார். அவரின் எல்லா சிறப்பு அம்சங்களையும் எப்படியோ இச்சிறு நூலில் சுந்தா உள்ளடக்கி விட்டாரே என்று வியந்து போகிறோம்! (வானதி பதிப்பகம், சென்னை - 600 017)

● ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன்கோட்டை.

*? ''திராவிட மறுமலர்ச்சிக் கழகம்'' தொடக்கச் சொல்லி வை.கோ.வை தொண்டர்கள் வற்புறுத்துகிறார்களாமே?*

! அது, இருக்கின்ற ஒரே உருப்படியான எதிர்க்கட்சியையும் பலவீனப்படுத்தும் முயற்சியாகத்தான் இருக்கும். கட்சிக்குள் ஜனநாயகம் என்பது கட்சிக்குள் அதன் சட்ட திட்டங்களுக்கு உட்பட்டுத்தான் நடக்க வேண்டும். வீதியிலே அல்ல. வை.கோவும்



● ரத்னச் சுருக்கம்...



● நிலைமை எப்படி?

சரி, மு.க.வும் சரி, ஆணவத்தை விட்டு நெருங்கி வருவதே அக்கட்சி அரசியலுக்கு மட்டுமல்ல, தமிழக அரசியலுக்கும் நல்லது.

● சுவீட் ரவி, கும்பகோணம். ❑

*? பெண்களைத் ''திருமதி புட்டோ'' என்று அழைப்பது எவ்விதத்தில் பொருந்துகிறது?*

! பிரபலமான பெண்மணிகள் பலர் திருமணத்துக்கு முந்தைய surname பின்னரும் தொடரவே இன்று விரும்புகின்றனர். ஆண் ஆதிக்கத்திலிருந்து பெண்கள் விடுபட நினைக்கும் இன்றைய உலகில் இது சகஜமாகி விட்டது. இன்னொரு பிரபல உதாரணம் வேண்டுமெனில் எலிஸபெத் டெய்லர், ரிச்சர்ட் பர்ட்டனை மணந்த பின்பும் எலிஸபெத் டெய்லராகவே இருந்தார்; மிஸஸ் பர்ட்டன் ஆகவில்லை!

● எஸ். எஸ். பூங்கதிர், திருவெண்ணெய்நல்லூர்.

*? கொடுமையிலும் கொடுமை எது?*

! கொடியது கேட்கின், 'பழைய ஃபிரிஜ்ஜுக்குப் பதில் புது ஃபிரிஜ் தருகிறேன்' என்று ஏமாற்றுவது; அதனினும் கொடியது, அப்படிக் கூறுபவர் வார்த்தையில் மயங்கிப் பணம் தந்து ஏமாறுவது!

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
சுவீட் ரவி,
16, கர்ண கொல்லை
அக்ரஹாரம்,
கும்பகோணம் - 612 001.

## அன்புள்ள பாலிஸிதாரரே

# உங்களுக்கு சிறந்த முறையில் சேவை நல்க எல்ஐசி-க்கு உதவிடுவீர்!

### 1

**பத்திரங்களைப் பராமரித்துப் பேணுதல்:** உங்களுடைய பாலிசி பத்திரத்தையும் மற்ற ஆவணங்களையும் பத்திரமாகப் பராமரித்து காக்கவும். உங்களுடைய பாலிசி எண்ணை டைரியிலும் பர்ஸில் கம்ப்யூட்டரிலும் குறித்து வைக்கவும். அவற்றை பத்திரமாக வைத்திருக்கும் இடத்தையும் பாலிசி எண்ணையும் உங்களுக்கு நெருங்கிய உறவினர்களிடம் தெரியப்படுத்தவும். நீங்கள் உங்களுடைய பாலிசி பத்திரத்தை இழந்து விட்டால், கவலைப்படாதீர்கள். உங்கள் பாலிசிக்கு சேவை நல்கிவரும் எல்ஐசி கிளையுடன் தொடர்பு கொள்ளுங்கள். அவர்கள் உங்களுக்கு மாற்றுப் பாலிசி கிடைக்க ஆவன செய்வார்கள்.

### 2

**பிரிமியம் தொகை செலுத்துதல்:** உங்களுடைய பாலிசி, ஊதிய சேமிப்பு திட்டத்தின் SSS-ன் கீழ் இல்லையெனில், பிரிமியம் செலுத்த வேண்டிய தேதியை தயவுசெய்து குறித்து வைத்துக் கொள்ளவும். மேலும் உங்கள் பாலிசிக்கு சேவை நல்கிவரும் கிளையில் காலந்தவறாது பிரிமியத் தொகையை செலுத்தவும். உங்கள் பாலிசி காலாவதியாக (லாப்ஸாக) விட்டுவிடாதீர்கள்.

### 3

**காலம் கடந்த பாலிஸிகளை புதுப்பித்தல்:** உங்களுடைய பாலிசி காலாவதியாகிவிட்டிருந்தால், நான்கு திட்டங்களில் ஏதாவது ஒன்றின் கீழ் நீங்கள் அதைப் புதுப்பித்துக் கொள்ளலாம். உங்களுக்கு உகந்த திட்டம் எதுவென உங்களுடைய எல்ஐசி ஏஜென்ட் அல்லது கிளையுடன் கலந்தாலோசிக்கவும். உங்களுடைய காலாவதியான பாலிசியை புதுப்பித்தல் மூலம், நீங்கள் முழு காப்பீட்டையும் மீட்டுப்பெறுவதோடு மட்டுமின்றி காலாவதியாகாமல் இருந்த போனஸையும் பெறுகிறீர்கள்.

### 4

**நியமனம்/அஸைன்மென்ட் (உரிமை மாற்றம்):** துரதிருஷ்டவசமாக நீங்கள் இறந்துவிட்டால், பாலிசி பணத்தைப் பெறுவதற்கு யாரையாவது நீங்கள் நியமனம் செய்துள்ளீர்கள் என்பதை தயவுசெய்து உறுதிசெய்து கொள்ளவும். ஓர் அஸைன்மென்ட் (உரிமை மாற்றம்) நியமனத்தை நீக்கிவிடுகிறது மற்றும் உங்களுடைய பெயருக்கு உரிமையை மீண்டும் மாற்றி அமைக்கப்பட்ட பிறகு புதிய நியமனம் செய்ய வேண்டும் என்பதை நினைவில் கொள்ளுங்கள் (பாலிசி மீது கடன் பெறும்பட்சத்தில் எல்ஐசி-யே அஸைனீயாக இருக்கும் தருணம் தவிர).

### 5

**பாலிஸியை இடம்விட்டு இடம் மாற்றிக்கொள்ளுதல்:** உங்களுடைய பாலிசி SSS-ன் கீழ் இல்லையெனில், நீங்கள் வேறு இடத்திற்கு வேலைமாற்றம் அடைந்துவிட்டாலும் நீங்கள் பிரிமியத்தை அதே எல்ஐசி கிளையில் செலுத்தலாம். அல்லது நீங்கள் வசிக்குமிடத்திற்கருகிலுள்ள கிளை அலுவலகத்திற்கு உங்களுடைய பாலிசி ரெக்கார்டுகளை மாற்றிக்கொள்ளலாம். அதன் மூலம் நீங்கள் பிரிமியத்தை சௌகரியமாக செலுத்த முடியும்.

உங்களுடைய பாலிசி SSS-ன் கீழ் இருப்பின், பாலிசி ரெக்கார்டுகளை உங்களுடைய வேலைமாற்றலான புதிய இடத்திலுள்ள எல்ஐசி கிளைக்கு மாற்றும்படி உங்களுக்கு சேவை நல்கிவரும் கிளையைக் கேட்டுக்கொள்ளுங்கள். அதோடு மாற்றியமைக்கப்பட்ட எல்ஐசி கிளைக்கு பிரிமியத் தொகையை செலுத்தும்படி உங்களுடைய புதிய அலுவலகத்தையும் கேட்டுக்கொள்ளுங்கள்.

### 6

**முகவரி மாற்றம்:** நீங்கள் வசிக்குமிடத்தை மாற்றினீர்களானால், உங்களுடைய புதிய முகவரியை எல்ஐசி-க்கு தெரிவிக்க மறந்துவிடாதீர்கள் (ஆம், உங்கள் பாலிசி எண்ணைக் குறிப்பிடத் தவறாதீர்).

### 7

**உரிமை கோருதல் (க்ளைம்ஸ்):** முதிர்ச்சியுறும் தேதிக்கு இரண்டு மாதங்களுக்கு முன்பு எல்ஐசி-யிலிருந்து நீங்கள் ஒரு 'டிஸ்சார்ஜ் வவுச்சரை' பெறுவீர்கள் (அல்லது மணி-பாக் பாலிசியாயின் சர்வைவல் ஆதாயங்களின் டியூ தேதிக்கு முன்பு) தயவு செய்து அதை பூர்த்தி செய்து உங்களுடைய பாலிசிக்கு சேவை நல்கும் எல்ஐசி கிளைக்கு உங்களுடைய பாலிசி பத்திரத்துடன் (ஏற்கனவே எல்ஐசி வசம் இல்லையெனில்) டியூ தேதிக்கு முன்பு திருப்பி அனுப்பி வைக்கவும். அதனால் முதிர்ச்சியடையும் தேதிக்கு முன்பே, பின் தேதியிட்ட காசோலையை நீங்கள் பெற முடியும்.

### 8

**உங்கள் வயதிற்கான நிருபணம்:** இதுவரை உங்கள் வயது நிரூபிக்கும் அத்தாட்சி பத்திரத்தைத் தாக்கல் செய்யவில்லையானால், அதை இப்போதே செய்துவிடவும். இதனால் உரிமைத் தொகையை பெறும் சமயத்தில் சிக்கல்கள் இல்லாமல் தவிர்க்கலாம்.

### 9

**உங்கள் பாதுகாப்பு தேவைகளை மறு பரிசீலனை செய்யவும்:** உங்களுடைய காப்பீடு மதிப்பு உங்களுடைய மாத வருமானத்தைக் காட்டிலும் 60 மடங்கு குறைவாயிருப்பின், உங்கள் காப்பீடு தொகையை அதிகரிப்பது குறித்து உங்களுடைய முகவரை (ஏஜென்ட்) கலந்தாலோசிக்கவும்.

### 10

**உங்களுடைய பாலிசி குறித்து ஏதாவது விளக்கமோ/உதவியோ தேவையெனில்:** உங்களுடைய எல்ஐசி கிளை அலுவலகத்துடன் அல்லது முகவருடன் தொடர்பு கொள்ளவும்.

## லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா

காப்பீடு செய்து பாதுகாப்பு பெறுவீர். ஆயுள் காப்புக்கு இணையில்லை என்பீர்.

NPS-6/93 TAM




# சக்கரவர்த்தித் திருமகன்

## 58. வாலி வதம்

**மா**லை நெருங்கி வந்த வேளை. மறுபடியும் சுக்ரீவன் பெருங் கர்ஜனை செய்து வாலியை யுத்தத்துக்கு அறைகூவி அழைத்தான்.

சந்தோஷமாகப் படுத்திருந்த வாலி திடுக்கிட்டான். இதென்னவென்று அவனுக்கு விளங்கவில்லை. பயம் என்று சொல்லுவதற்கில்லை. ஆயினும் கொஞ்சம் நிறம் மாறினான். பிறகு ரோஷம் கொண்டான்.

தோல்வியடைந்து, அடிபட்டுப் பயந்தோடின தம்பி மறுபடியும் இம்மாதிரி வந்து கர்ஜிக்கிறானே என்று பொறுக்க முடியாத கோபத்தோடு எழுந்து உடனே அவனை ஹதம் செய்துவிடத் தீர்மானித்துப் புறப்பட்டான். தரையை அவன் காலால் மிதித்தது, பூமியைப் பிளப்பது போல் இருந்தது.

“வேண்டாம்! இன்று வேண்டாம்! நாளை பார்த்துக் கொள்ளலாம்” என்றாள் தாரை, அவனைப் பிரியமாகத் தடுத்து.

வாலியின் பட்ட மகிஷி, மகா புத்திசாலியான தாரை புருஷனை ஆலிங்கனம் செய்து கொண்டு, “வேண்டாம்! யுத்தத்துக்கு அவசரமில்லை. நாளைக் காலையில் சென்று சத்ருவை அழித்து விடலாம். சரியாக யோசிக்காமல் இப்போது வெளியேறித் தம்பியுடன் யுத்தம் செய்வது சரியென்று எனக்குத் தோன்றவில்லை. ஏதோ எனக்குப் பயமாக இருக்கிறது. இதில் மோசம் இருக்கிறது. அடிபட்டு, அவமானப்பட்டு உயிர் தப்பினால் போதும் என்று ஓடி ஒளிந்து கொண்ட தம்பி என்ன தைரியம் கொண்டு இன்றே மறுபடியும் வந்து இவ்வளவு அட்டகாசம் செய்கிறான்? இதைப் பற்றித் தீர ஆலோசிக்க வேண்டும். பிரியநாதா! இப்போது போக வேண்டாம். ஏதோ மோசமும் அபாயமும் நான் இதில் காண்கிறேன். என் பேச்சைப் புறக்கணிக்க வேண்டாம். அவனுடைய பேச்சையும் கர்ஜனையையும் கவனித்தால் ஏதோ பெரும் சகாயம் சேர்த்துக் கொண்டு நிற்கிறான் என்பது நிச்சயமாகிறது. இல்லாவிடில் இவ்வளவு கர்வம், இவ்வளவு பிடிவாதம் ஏன்? பலமான சகாயத்தைச் சம்பாதித்திருக்கிறான் என்பது உறுதி. அந்தச் சகாயத்தின் பலத்தை நன்றாய்ப் பரீட்சை செய்து தைரியமடைந்தே வந்திருக்கிறான் உங்கள் தம்பி என்பது நன்றாகக் காண்கிறது. இதில் சந்தேகமில்லை. நம் பிரிய குமாரன் அங்கதனுடைய நலனைக் கருதுவீர்களாக. நான் சொல்லும்

பேச்சைத் தட்டாதீர்கள். ஏதோ பிதற்று கிறேன் என்று எண்ண வேண்டாம். சாரர்களால் அங்கதன் அறிந்து என்னிடம் சொன்னதைச் சொல்லுகிறேன். அயோத்தியிலிருந்து மகாவீரனான ஒரு ராஜகுமாரன் நம் பிரதேசத்துக்கு வந்திருக்கிறானாம். அவனை எல்லாரும் உத்தம தர்மவானாகவும் வீரனாகவும் மதிக்கிறார்களாம். அவனுடைய சிநேகத்தை உங்கள் தம்பி அடைந்து விட்டானாம். இதனால் அவனுடைய பலமும் தைரியமும் வளர்ந்து போயிற்று. உங்கள் தம்பியும் நல்லவன், வீரன், அவனை ஏன் விரோதிக்க வேண்டும்? அவனை விட நமக்கு யார் நெருங் கிய பந்து? அவன் உங்களுக்குப் பக்தியோடு பணி செய்து பராக்கிரமமான துணையாவான். சுக்ரீவனை நாம் மறுபடி அழைத்து விரோதத்தை மறந்து விட்டு ஒன்றாகப் போவதே நலம். அருமைநாதனே, என் பேச்சைப் புறக்கணிக்க வேண்டாம்'' என்றாள்.

வாலிக்கு இந்தப் பேச்சு பிடிக்கவேயில்லை. கடல் பொங்குவது போல் எழுந்த கோபத்தில் அவன் தன் மனைவியின் பேச்சில் நியாயம் காணவில்லை. கால பாசத்தால் இழுக்கப்பட்டுச் செல்பவன் எப்படிக் காண்பான்? தாரையின் பெயருக்குத் தகுந்த முக லக்ஷணம் கொண்ட மனைவி சொன்ன புத்திமதி வாலிக்குச் சம்மதப்படவில்லை.

"என்ன சொல்லுகிறாய்! சத்துருவான தம்பி செய்யும் கர்ஜனையை நான் எப்படிப் பொறுப்பேன்? ஏன் பொறுப்பேன், அழகியே! எதிரி யுத்தத்துக்கு அழைக்கும் போது வீரன் போகாமலிருக்க முடியுமா? அதைவிட உயிரை விடுவதே மேலாகும். இந்த அற்பன் போடும் கர்ஜனை காதில் கேட்டுக் கொண்டு சும்மா இருக்க என்னால் சாத்தியமில்லை. நீ ராமனைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். அவன் தர்மத்தை அறிந்தவன், பாபத்துக்குப் பயந்தவன். அவன் அநியாய காரியத்தில் இறங்க மாட்டான். நீ என்னைத் தடுக்காதே, திரும்பிப் போ! சுக்ரீவனை நான் கொல்ல மாட்டேன். அவன் கர்வத்தை அடக்கி விடுவேன், அவ்வளவே. அந்த துராத்மாவின் அட்டகாசத்தைப் பார்த்துச் சகிக்க முடியவில்லை. உனக்கு என் மேலிருக்கும் பிரியத்தால் சொல்ல வேண்டியதைச் சொன்னாய். தம்பியின் கொழுப்பை அடக்கி ஓட்டி விட்டு வெற்றியுடன் திரும்பி வருவேன். பயப்பட வேண்டாம். மங்கல மொழி சொல்லி என்னை அனுப்பு, தடுக்க வேண்டாம்'' என்றான்.

கவி வால்மீகி வாலியை எவ்வளவு உயர்த்தி வைத்துச் சித்திரிக்கிறார்!

**தா**ரையும் கண்களில் நீர் ததும்பிய வண்ணம் வாலியை வலம் செய்து மங்களம் சொல்லி விட்டு, நல்லதாக முடிய வேண்டும் என்று வேண்டிக் கொண்டு கவலையுடன் அந்தப்புரம் திரும்பிப் போனாள். தாரையையும் அவளுடைய தோழிகளையும் அனுப்பி விட்டு, வாலி புற்றிலிருந்து பாம்பு சீறிக் கொண்டு வெளிவருவது போல் சுக்ரீவனைத் தேடிச் சென்றான்.

மகா ரோஷத்துடன் போன வாலி தம்பி தைரியமாக தேஜஸ் வீசிக் கொண்டு நிற்பதைப் பார்த்தான். பார்த்ததும் கச்சையை இறுக்குக் கட்டிப் பாய்ந்தான். சுக்ரீவனும் வாலியை நோக்கி வேகமாய் வந்தான்.

''உயிரில் ஆசை வைத்திருப்பாயாயின் ஓடிப் போ. இந்த



ராஜாஜி



''ஔவை இப்போது உயிரோடு இருந்தால் என்ன கூறுவார்...?''

''கற்றது கால் குலேட்டர் அளவு, கல்லாதது கம்யூட்டர் அளவு'ன்னு...!''

- விருதை ராஜா.

முஷ்டிக்கு உன் உயிரை தத்தம் செய்யாதே!'' என்று கர்ஜித்தான் வாலி.

சுக்ரீவனும் கோபமாக மறுமொழி சொன்னான். பிறகு யுத்தம் முற்றிற்று. இருவரும் அடி மேல் அடி அடித்து ரத்தப் பிரவாகம் ஓடிற்று. மிகவும் அடிபட்ட சுக்ரீவன், ஒரு ஆச்சா மரத்தைப் பிடுங்கி அதனால் வாலியைப் பலமாக அடித்தான். வாலி அந்த அடியின் வேகத்தால் கொஞ்சம் அசைந்து கோபம் கொண்டு அவனும் மரங்களை வேரோடு பிடுங்கி சுக்ரீவனை அடித்தான். இருவரும் சம வீரர்கள். வெகு நேரம் கோரமான யுத்தம் நடந்தது. வர வர வாலியின் பலம் அதிகரித்தது. சுக்ரீவனுடைய பலம் குறைய ஆரம்பித்தது.

இதைப் பார்த்துக் கொண்டிருந்த ராமன், இனி சுக்ரீவன் தாங்க மாட்டான், உயிர் நீப்பான் என்று கண்டு, வில்லை வளைத்துக் கொல்லும் பாணத்தை விட்டான். அது நேராகச் சென்று வாலியின் வைரமான மார்பை ஆச்சா மரத்தைத் துளைத்தபடியே துளைத்து விட்டது. வாலியின் வாழ்க்கை முடிந்தது. விழா முடிந்ததும் அதற்காக அலங்கரிக்கப்பட்ட துவஜஸ் தம்பம் தரையில் கிடப்பது போல் ரத்தம் பெருகக் கீழே வாலியின் உடல் கிடந்தது.

இப்படி ராமனுடைய பாணத்தால் மரண காயமடைந்து மகா சூரனான வாலி கோடாலியால் வெட்டி வீழ்த்தப்பட்ட பெரிய காட்டு விருக்ஷத்தைப் போல் கையும் காலும் விரிந்து கீழே கிடந்தான்.

கீழே கிடந்தாலும் வாலியின் அழகும் காந்தியும் குறையவில்லை. ஆபரணங்கள் பூண்டிருந்த அவன் தேகம் சூரியன் அஸ்தமிக்கும் போது சிவந்து பிரகாசிக்கும் மேகக் கூட்டத்தைப் போல் பிரகாசித்தது. இந்திரனால் கொடுக்கப்பட்ட தெய்வீகமாலை அவன் மார்பில் பிரகாசித்துக் கொண்டு, அவன் உயிரையும் அவன் திருவையும் தாங்கி மிகப் பொலியச் செய்தது. அந்த மாலையின் ஜோதியும் வீரனுடைய மார்பில் குத்தி நின்ற கொல்லும் ராமபாணமும், ரத்தம் பெருகும் காயமும் எல்லாம் சேர்ந்து அந்த மகாவீரனுடைய தேகத்தை மும்மடங்கு பொலிவுடன் விளங்கச் செய்தன. வீழ்ந்து கிடந்த இந்த மகா வீரனுடைய கம்பீரத் தோற்றத்தை வால்மீகி மிக அழகாக வர்ணிக்கிறார். உயிர் நீங்குவதற்கு முன் இறக்கும் தறுவாயில் சூரர்களுடைய காந்தி மிகப் பொங்கி வளர்ந்து எப்போதும் விட அதிகமாக ஜொலிப்பது இயற்கை.

எதிர்பாராத வகையில் வீழ்த்தப்பட்ட வாலி, நாலா பக்கமும் தன் பார்வையைச் செலுத்திப் பார்த்தான். எங்கிருந்து தன் உயிரைக் கொண்டேக இந்த பாணம் வந்தது என்று சுற்றிலும் பார்த்தான். அச் சமயம் ராம லக்ஷ்மணர்கள் அவன் பக்கத்தில் வந்தார்கள். வில் லேந்தி வந்த அவர்களைப் பார்த்ததும் வாலியின் கண்களில், சூரர்கள் கண்களில் வடியும் கண்ணீர் வடிந்தது. மெதுவான குரலில் தருமத்துக்கு இசைந்ததும் மேம்பட்ட பண்பாடு நிறைந்ததுமான மொழிகளைச் சொல்லி ராமனுடைய குற்றத்தை எடுத்துக் காட்டிக் கண்டித்துப் பேசினான்.

உயிர், தேகத்தை விட்டுப் போகும் தறுவாயானபடியால் பேச்சுத் தடைப்பட்டது. ஆயினும் தாழ்ந்த சுவரத்தில் கஷ்டப்பட்டுப் பேசினான்.

''ராமனே! தசரத சக்கரவர்த்தியின் புத்திரனாவாய். உத்தம குலத்தில் பிறந்த நீ, பெரும் புகழும் அடைந்த நீ, ஏன் இப்படிச் செய்தாய்? உன் நற்குணங்களும் ஒழுக்கமும் உலகம் அறிந்த விஷயம். இப்படியிருக்க, நான் வேறொருவனிடம் யுத்தம் செய்து கொண்டு அதில் மனம் முற்றிலும் செலுத்தி வந்த சமயத்தில் என் கண்களுக்குத் தென்படாமல் மறைந்து நின்று என் மேல் பாணம் விட்டு என்னைக் கொன்றாய். உன்னைப் பற்றி ஜனங்கள் சொல்லும் புகழ் மொழிகளுக்கு இது முற்றிலும் விரோதமாயிருக்கிறதே! எல்லாப் பிராணிகளிடமும் கருணை கொண்டவன், தோஷ எண்ணங்களுக்கு இடம் கொடுக்காமல் புலன்களையும் உள்ளத்தையும் அடக்கியாள்பவன், அற வழியில் நிற்பவன், பொறுமை, சாந்தி, தருமம், சத்திய பராக்கிரமம் முதலிய உத்தம குணங்களை எல்லாம் பெற்றவன் என்று கீர்த்தி பெற்றாயே, இப்போது அவையெல்லாம் என்னவாயிற்று? என்னைக்



"என்னங்க, நம்ம வீட்டுக்கு வந்திருக்கற விருந்தாளி கிளம்பிப் போக மாட்டார் போலிருக்கு?"

"எப்படி சொல்றே?"

"புண்ணாக்குல காப்பி போட்டுக் கொடுத்ததும் ரொம்ப ருசியா இருக்கு'னு சொன்னாரே!"

– எஸ். முகம்மது ஜூசுப்.

கொன்று நீ என்ன லாபம் பெறுவாய்? யோசிக்காமல் இந்த அதரும காரியம் செய்தாய். என் மனைவி உன்னைப் பற்றி என்னை எச்சரித்தாள். அவள் பேச்சைத் தட்டி விட்டு வந்தேன். என் கண்ணுக்கு முன் நின்று நீ யுத்தம் செய்திருந்தாயேல் இன்றே நீ செத்திருப்பாய். என்னை நீ வேண்டிக் கொண்டிருந்தால் ஒரே நாளில் சீதையை உன்னிடம் அழைத்து வந்து விட்டிருப்பேனே! சுக்ரீவனுக்காக என்னைக் கொன்றாயே. ராவணனைக் கொன்று, பிரேதத்தைக் கழுத்தில் கயிறு போட்டுக் கட்டி உன்னிடம் இழுத்துக் கொண்டு வந்து விட்டிருப்பேனே! மைதிலியை எவ்விடம் மறைத்து வைத்திருந்தாலும் கண்டுபிடித்து உன்னிடம் ஒப்புவித்திருப்பேனே! பிறந்தவர்கள் இறப்பது விதி. ஆயினும் நீ முறை தவறி என்னைக் கொன்றாய். உன் குற்றம் பெருங்குற்றம்.''

இவ்வாறு தேவேந்திர குமாரனான வாலி மரணாவஸ்தையில் ராமனைக் கண்டித்தான்.

வாலியின் இந்தக் குற்றச்சாட்டுக்கு ராமன் என்ன பதில் சொல்ல முடியும்? ஏதோ சொன்னதாகவும், அதைக் கேட்டு வாலி சமாதானப்பட்டதாகவும் வால்மீகி ராமாயணத்தில் சொல்லப்படுகிறது. அதில் சாரம் இல்லை என்று விட்டு விட்டேன். பெரியோர்கள் மன்னிப்பார்கள். ராமாவதாரத்தில் ஆண்டவனும் தேவியும் சகிக்க வேண்டிய துக்கங்களில் இந்தத் தவறும் பழியும் ஒன்று.

சுக்ரீவனால் அடிபட்டு உடம்பெல்லாம் ரண காயங்கள். அதன் மேல் ராம பாணத்தினால் உண்டான மரணாவஸ்தை. இவற்றையெல்லாம் பொறுத்துக் கொண்டு கடைசியாக வாலி ராமனுக்கு ஒரு வார்த்தை சொன்னான் :

''ஏதாயினும் சரி, நான் இனி அதைப் பற்றி தோஷம் சொல்லவில்லை. எனக்கு மிகப் பிரியமான குமாரன் அங்கதன் மிகவும் துக்கப்படுவான். சுக்ரீவனும் நீயும் அவனைச் சரியாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். அவனை உன் வசம் ஒப்புவித்தேன். அவனைக் காப்பாற்றுவது உன் கடமையாகப் பாவிக்க வேண்டும். ஜலம் வற்றிப் போன குளத்திலுள்ள தாமரைக் கொடி போல் துக்கப்படுவான். நான் சுக்ரீவனுக்குச் செய்த கொடுமை, தாரையின் தூண்டுதலால் என்று அவன் எண்ணாமலிருக்க வேண்டும். அங்கதனை கவுரவமாகவும் அன்புடனும் நடத்த வேண்டும். இதை நீ செய்தால் போதும். நான் வேறொன்றும் விரும்பவில்லை. வீரர்களுக்குரிய உலகம் எனக்குக் காத்திருக்கிறது'' என்று சொல்லி விட்டு, நினைவு இழந்தான்.

ஒன்று நிச்சயம். வாலியை ராமன் எதிர்த்து ஜெயித்திருக்க முடியாது. ராவணனைத் தேவர்கள் எதிர்க்க முடியாதிருந்தது போலவே இதுவும் வரத்தினால் ஏற்பட்ட நிலைமை. மறைந்து நின்றேதான் ராமன் வாலியைக் கொல்ல முடியும். ஆயினும் ஏன் வாலியைக் கொல்ல வேண்டும் என்கிற கேள்வி நிற்கிறது.

கபந்தனுடைய சாப விமோசன காலத்தில் அவன், ''நீ சுக்ரீவனுடைய நட்பைச் சம்பாதித்து, சீதையை அடைவாய்'' என்று சொன்னபடி ராமன் சுக்ரீவனைத் தேடிச் சென்றான். அவனை அடைந்து அக்கினி சாட்சியாக நட்புப் பிரதிக்ஞையும் செய்து விட்டான்.

மன்னிக்கத் தகாத அபராதம் ஏதும் வாலிக்கு சுக்ரீவன் செய்யவில்லை. அப்படியிருக்க, வாலி தான் பெற்றிருந்த பலத்தைக் கொண்டு தம்பியைப் படாத பாடுபடுத்திக் கொடுமை செய்து வந்தான். இதைச் சொல்லி முறையிட்ட சுக்ரீவனுக்கு ''உன் பகைவனை ஒழித்து, மனைவியையும் ராஜ்யத்தையும் நீ மறுபடி அடையச் செய்வேன், இது சத்தியம்'' என்று சுக்ரீவனுக்கு உறுதியான பிரதிக்ஞை செய்து விட்டான். இதன் மேல் வேறு வழியில்லை. வாலியை மறைந்து நின்று கொல்வது அவசியமாக ஏற்பட்டு விட்டது. காதல் மனைவியைத் திருப்தி செய்ய, மாய மானைத் தேடிப் போனதின் பயனாக ஒன்றன்பின் ஒன்றாகச் சிக்கலும் துக்கமும் தர்மசங்கடங்களும் ராமனைத் தொடர்ந்து வந்தன. இவ்வளவே என் சிற்றறிவுக்குக் காணப்படுவது.

(தொடரும்)

## 15

கஸ்தூரிரங்கன் என்ன தான் படபடப்பாய், உறுதியாய், 'என்னால இந்த ரெட்டை வாழ்க்கை வாழ முடியாது, வெலகிக்கறேன்' என்று சொன்னாலும், அவன் எதிரில் அமர்ந்திருந்தவர் கொஞ்சம் கூட உணர்ச்சி வசப்படவில்லை.

முகப்பு நரைக்கொத்து நெற்றியில் புரண்டு கொண்டிருந்தது. ஒருவேளை, வேலை அதிகமாக இருக்கலாம். நிமிர்ந்து அவன் கண்களில் ஊடுருவிப் பார்த்தார். கையில் வைத்திருந்த பென்சிலை மேசை மீது வைத்து சோம்பல் முறித்தார். மெல்லச் சிரித்தார்.

''ஏன் ரங்கா?''

''என்னது ஏன்?''

''வெலகப் போறேன்னு சொன்னியே, ஏன்?''

''.......''

''லவ்வா? அந்தப் பொண்ணுதான் காரணமா?''

''.....''

''ஒவ்வொருத்தர் வெற்றிக்குப் பின்னாலயும் ஒரு பெண் இருக்கறதாச் சொல்லுவாங்க. நீ அந்தப் பழமொழியை மாத்திடுவே போல இருக்கு. ஒவ்வொருத்தர் தோல்விக்குப் பின்னாலயும்...''

''இல்ல. அவளுக்கு எதுவும் தெரியாது.''

''நம்பறேன். பின்ன ஏன் வெலகறேன்னு சொல்றே?''

''இன்னிக்கு என்ன ஆச்சி தெரியுமா? நான் மொதலைப் பண்ணைக்குப் போயிருந்தேன்.''

''அவ கூட?''

''ஆமா. கூப்ட்டா. எங்கூட சேர்ந்து சுத்தணும்னு சொன்னா. போனேன். போன இடத்தில எனக்கு மெஸேஜ் வருது. நாளைக்கு...''

''ஷ்ஷ்ஷ்....''

கஸ்தூரிரங்கன் அடங்கினான்.

''ஒனக்கு வந்த மெஸேஜ் என்னன்னு எனக்குத் தெரியும். காலைலேயே வந்திருக்கணும். கொஞ்சம் லேட்டாயிடுச்சி. அவசரம். எங்க ஒன்னை மிஸ் பண்ணிடப் போறோமோன்னு, அங்க வந்து செய்தியைத் தெரிவிச்சிருக்கணும்.''

''அவளுக்குச் சந்தேகம் வர்ற மாதிரியா?''

''ச். ச். ரொம்பத் தப்பு.''

''அப்படித்தான் நடந்தது. நான் என் கலீதாவோட பார்வைல ரொம்ப நல்லவன். அவ ஒரு சந்தேகப் பிராணி வேற. அவளுக்கு எம்மேல இருக்கற நல்ல அபிப்ராயம் மாறாம இருக்கணும்னா, நான் இப்பவே எல்லாத்திலேர்ந்தும் வெலகிக்கணும்.''

''நீ நல்லவன்தான் ரங்கா. கெட்டவன்னு யார் சொன்னது?''

''எப்படி இருந்தாலும் சரி, வெலகிக்கறேன்.''

''வெலகிக்கறேன், வெலகிக்கறேன்னு நீ சொன்னாப் போதுமா ரங்கா? பழசையெல்லாம் மறந்துட்டியா? உன் வைராக்கியம் அவ்வளவுதானா? பாதிக் கிணறு தாண்டிட்டு, நடுவில மனசு மாறிட்டா, கிணத்துலயே விழுந்துர வேண்டியதுதான். அதனாலதான் நான் சொன்னேன். நீ பாட்டுக்குக் கல்யாணத்தை முடிவு பண்ணிடாதன்னு. கொஞ்ச நாள் பொறுத்துக்க....''

''பொறுத்துக்கிட்டா?''

''எல்லாம் ஒரு முடிவுக்கு வந்துடும்.''

''அப்படின்னா, கலீதாகிட்ட நீங்களே எல்லாத்தையும் சொல்லிடுவீங்களா?''

''அதை அப்புறம் பார்க்கலாம் ரங்கா. நான் சொன்னா கலீதா நம்புவாளான்னு தெரியலை. இந்த மாதிரி விஷயத்தை எல்லாம் லேடீஸ் கிட்ட, ஏன் யார்கிட்டயுமே சொல்லாம இருக்கறதுதான் நல்லது. இன்னொரு தடவை உன்னை இந்த மாதிரியான தர்ம சங்கடத்தில சிக்க விடாம நான் பாத்துக்கறேன்!''

கஸ்தூரிரங்கன் அவர் முகத்தைப் பார்த்தான்.

''போ, ரங்கா. மனசை வீணாப் போட்டுக் கொழப்பிக்காதே.''

''குட் ஈவினிங் சார்!'' என்று கதவு திறந்து ஒரு பெண் குரல் கேட்டு, கஸ்தூரிரங்கன் திரும்பிப் பார்த்தான்.

பளிச் அழகுடன் அவள் நின்றிருந்தாள். அவள் முகத்திலும், உடலிலும் இளமை தெறித்தது. உள்ளே வந்தாள். அவளுடனேயே வாசனை வந்தது.

''இது மாலினி. நம்ப ஸ்டோர்ஸ்ல காஷியர். மாலினி, கஸ்தூரிரங்கன். சபரி ஓனர். நம்ப கஸ்டமர். முக்கியமான கஸ்டமர்.''





''ஹலோ!'' என்றாள் மாலினி.

''ஹலோ!'' என்றான் கஸ்தூரிரங்கன். மாலினி அவனைப் பார்த்து வெகு தெளிவாகக் கண்ணடித்து, ஓர் உல்லாசச் சிரிப்பு சிரித்தாள்.

கஸ்தூரிரங்கனுக்கு வியர்த்து விட்டது. அவர் பார்த்து விட்டாரா? இல்லை.

''நான் வரேன் சார்!'' என்றான்.

''ரைட்டோ. அடுத்த தடவை கொஞ்சம் முன்னாலேயே ஆர்டரை அனுப்பிடுங்க. டெலிவரிக்கு வசதியா இருக்கும்.''

கஸ்தூரிரங்கன் வெறுமையாகத் தலையசைத்து விட்டு, அறையிலிருந்து வெளிப்பட்டு, வாசலை நோக்கிச் செல்லும் படிகளைக் கடக்கத் தொடங்கினான்.

கடற்கரைச் சாலையில் அந்த மாருதி ஜீப் வெகு வேகமாக வந்தது. ஜீப்பின் கூரையில் இரண்டு ஒளி விளக்குகள் தனியாகப் பொருத்தப்பட்டு, அவை வெளிச்சத்தை இடைவிடா மழை போல் உமிழ்ந்து கொண்டிருந்தன. ஜீப்பின் இருபுறமும் தூசி பறந்தது. இளைஞர்களும், வயதானவர்களும், குழந்தைகளும் சட், சட் என்று ஒதுங்கி ஓரம் சென்றார்கள். வயதானவர்கள் சபித்தார்கள். இளைஞர்கள் விசிலடித்துக் கையசைத்தார்கள். குழந்தைகள் குதூகலித்தார்கள். மாருதி ஜீப்பின் ஹாரன் ஒருமுறை ஒலித்தது. அது ஒரு வினோதமான ஒலி. துந்துபி முழக்கத்தை நினைவுபடுத்தும் பப்பர, பப்பர, பய்ங்க்.

''மெள்ள.... மெள்ளடி!'' என்றாள் டிரைவிங் சீட்டுக்குப் பக்கத்து இருக்கையில் உட்கார்ந்திருந்த கவிதா.

''அம்மா... கட்டுப்பெட்டி.... மொழங்கை வரைக்கும் ரவிக்கை போடற கற்காலக் கண்மணி, பயப்படாதே. ஒண்ணும் ஆயிடாது. நான் சோழவரம் ரேஸ்ல ஃபஸ்ட் வந்தவ. இந்த ஜீப்பைத் தாறுமாறா ஓட்டி, எது மேலயாவது இடிச்சி ஒன்னைக் க்ளோஸ் பண்ணிட மாட்டேன். நீ இன்னும் உன் காதலனோட தனியா நூறு வருஷம் சுத்தப் போறே. கல்யாணம் பண்ணிக்கிட்டு ஆயிரம் வருஷம் விக்கிரமாதித்தன் மாதிரி ஜாலியா இருக்கப் போறே!'' என்றாள் ஜீப்பை ஓட்டி வந்தவள். அவள் ஜீன்ஸ் பேண்ட்டும், ஜரஸ் ஷர்ட்டுமாய் இருந்தாள்.

ஜீப்பின் பின் இருக்கைகளில் இன்னும் ஆறு கவர்ச்சியான இளமைத் துள்ளல்கள் இருந்தன. அவை கலகலவென சிரித்தன. வண்ண வண்ணமான, விதவிதமான ஆடைகளில் விதவிதமாகச் சிரித்தார்கள்.

கவிதா வெட்கப்பட்டாள்.

அது என்னவோ ஆங்கிலப் படத்தின் ஒரு காட்சி போலத்தான் ஜீப்பின் வருகை தெரிந்தது. சபாரியின் ஒரு ஓரத்தில் நாற்காலிகளில் உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தவர்களின் பார்வையில் இறக்கத்திலிருந்து மேலேறிய ஜீப்பின் உச்சி முதலில் தெரிந்தது. அதன் முகப்பு விளக்குகள் உட்கார்ந்திருந்தவர்களை வெளிச்சத்தில் நனைத்தது.

ஜீப் அவர்களை நோக்கி மோத வருகிற மாதிரி வந்து, திடீரென்று ஒரு வளைவு வளைத்து திரும்பி, மணல் தேய நின்றது.

''என்னம்மா, எங்க உன் காதலன்?''

''இங்கதான் இருக்கான்னு சொன்னே.. இங்கேன்னா எங்கே? இங்க பீர் பாட்டில் பொறுக்கற பசங்க கூட இருப்பாங்க. அவுங்கள்ல யாராவது ஒருத்தனா?''

''ச்சீ!''

''ஐயோ. வெக்கத்தைப் பாருடி... ஆனந்தா.. என் கண்ணையே உன்னிடத்தில ஒப்படைக்கறேன்...''

''ஏய்... வைஷ்ணவி சும்மா இருக்க மாட்டீங்க? நான் அப்புறம் ஆளைக் காட்ட மாட்டேன்!''

கஸ்தூரிரங்கன் வெளிர் நீலச் சட்டையும், கருநீல பான்ட்டும் அணிந்து கொண்டு, வெகு இளமையாக, வெகு உற்சாகமாக மேஜைக்கு மேஜை விசாரித்துக் கொண் டிருந்தான். சிரித்துக் கொண்டிருந்தான். கஸ்டமர் அடித்த ஜோக்கிற்குத் தோள் களைக் குலுக்கிப் புன்னகை காட்டினான்.

''அதோ... அவர்தான்'' என்றாள் கவிதா.

''எவருதான்? கடைசி சேர்ல வழுக் கைத் தலையோட இருக்காரே...''

''ஏய்... பரி.. அவர் ஜட்ஜ் மாமாடி. போன வாரந்தான் அவருக்கு அறுபதாங் கல் யாணம் நடந்தது. கவிதா அவரை லவ் பண்ணா, ஜட்ஜ் மாமி நம்மளையெல்லாங் கூட உண்டு, இல்லைன்னு ஆக்கிடுவாங்க!''

சிரித்தார்கள்.

''சொல்லு கவி... யாரு?''

''நீங்க இப்படி கிண்டல் பண்றதாயிருந்தா சொல்ல மாட்டேன்''

''ஷ்... நோ கிண்டல். நோ கண்டல். சொல்லு கவி.''

''அதோ... டேபிளுக்கு, டேபிள் போய் விசாரிக்கறாரே...''

''அப்படின்னா...''

''அப்படின்னா... சபரி ஓனரா?''

''ம்!''

''அடிப்பாவி! சாப்பாட்டு ராமி. கடைசி வரைக்கும் சாப்பாட்டுக்குக் கஷ்டப்படக் கூடாதுன்னு ஹோட்டல் ஆளை செலக்ட் பண்ணிட்டியா?''

''கவிதா, வெளையாட்டெல்லாம் அப் புறம். ஒரு சீரியஸ் விஷயம்!'' என்றாள் பரி, பரி என்று அழைக்கப்படும் பரிமளா.

ஜீப்பில் கவிட்ச் போடப்பட்ட மாதிரி அமைதி நிலவியது. எல்லோரும் திரும்பிப் பரிமளாவின் முகத்தைப் பார்த்தார்கள்.

''நீ நெஜமா அந்தாளைத்தான் காதலிக் கறியா கவிதா?''

கவிதா ஜிமிக்கி ஆடத் தலையை மேலும் கீழும் அசைத்தாள்.

''கொஞ்சம் ஜாக்கிரதையா இருந்துக் கடி!'' குரலில் கவலையுடன் பரிமளா சொன் னாள்.

''ஏன்?'' என்றார்கள் அத்தனை பேரும்.

''இந்தாளை நான் விடியக்காலைல திருவான்மியூர் பீச்சோரம் பாப்பேன்.''

''ஸோ வாட்? விடியக்காலைல திருவான்மியூர் பீச்சோரம் நீ எதுக்குப் போனே?''



எதுமாதிரியுமில்லாத
புதுமாதிரியாய்
அஸ்மாஸ்
123, நேதாஜி ரோடு, மதுரை 1
சர்ட்டிங், சூட்டிங், சாரீஸ், ரெடிமேட்
மற்றும் அனைத்து ஜவுளிகளுக்கும்

''நான் அப்பா கூடயும், டாமி கூடயும் வாக் போகும் போது பாப்பேன். ஒரு ரெண்டு தடவையாவது பார்த்திருப்பேன். சபரி, முழுக்க முழுக்க வெஜிடேரியன் ஹோட்டல்தானே. இவர் அங்க வந்து படகுல வர மீன்காரங்களோட பேசி மீன் வாங்குவாரு. அதுவும் செத்துப் போன மீன். வேன்ல எடுத்துக்கிட்டுப் போவாரு. வெஜி டேரியன் ஹோட்டல்காரர் எதுக்கு மீன் வாங்கணும்?''

''ஏய்...'' என்றார்கள் மற்றப் பேர்கள் அனைவரும். ''கம்மா கத்தாதேடி.... அதுக் குத்தான் ஒன்னை பாடப் புஸ்தகத்துக்கு நடுவுல வெச்சி இங்கிலீஷ் கதையெல்லாம் படிக்காதேன்னு சொல்றது.''

கதோ அவர்கள் பேச்சில் கவனமின்றி, கஸ்தூரிரங்கனைப் பார்த்தாள். குழந்தைத் தனமான, பால் வடியும் இளமையான முகம் தான் இப்போதும் கொண்டிருந்தான். திரு வான்மியூர் கடலோரம் மீன் வாங்குவானா? நேற்று அப்படித்தான் முதலைப் பண்ணை யில், யாரோ பேப்பர் ஒட்டி விட்டுப் போகி றான். அவளிடம் இயற்கை அழைப்பு என்று காரணம் சொல்லி விட்டு அவசரமாய் அவளை விட்டுப் பிரிந்து போகிறான்.

என்ன இதெல்லாம்?

கஸ்தூரிரங்கன் உண்மையில் யார்? திருவான்மியூரில் ஏன் மீன் வாங்க வேண் டும்?

*சில விஷயங்கள் குழப்பமான தோற்றத் தில் இருக்கும் போது, எந்தக் கோணத்தி லிருந்து பார்த்தாலும் தெளிவு கிடைப்ப தில்லை. காரணம், பார்வையைச் செலுத்தும் போதே, அங்கு குழப்பத்தை மனம் எதிர் பார்த்திருப்பதால்தானே? குற்றம், அந்தத் தோற்றத்திலா? அல்லது பார்க்கும் விழி களிலா?*

கதோ குழம்பிப் போன மனநிலையில் இருந்தாள். கஸ்தூரிரங்கன் மேல் சந்தேக அம்புகள் நிறைந்த பார்வை பார்த்தாள். அவள் இதயத்தின் படபடப்பு இன்னும் அதி கமாகிற மாதிரி, அப்போது அது நிகழ்ந்தது.



பூனாவின் அருகில் உள்ள 'மந்தாரிசால்' என்னும் கிராமத்தில் 200க்கும் மேற்பட்ட குடும்பத்தினர் மாஜிக் காட்டுவதை தொழி லாகக் கொண்டுள்ளனர்!

- மஞ்கதேவன்

எவனோ ஒரு 'இருட்டு மூஞ்சிக் காரனு'க்காகத் தன்னை உதாசீனப்படுத்தி விட்டு, கஸ்தூரிரங்கன் போய் விட்டான் என்று கதோ கோபப்பட்டாளே, அதே 'இருட்டு மூஞ்சிக்காரன்' இப்போதும் கஸ்தூரிரங்கனை நெருங்கினான். அவன் தோளில் தட்டினான்.

அவனைப் பார்த்தவுடன் கஸ்தூரிரங் கனின் முகம் மாறியது. வந்தவனுடன் தனி யாகச் சென்று காஷ் கவுண்டரின் பின்னால் இரும்புப் பெட்டகம் போல் காட்சியளித்த ஒரு பீரோவைத் திறந்து, அதிலிருந்து ஒரு சிகரெட் பாக்கெட்டை எடுத்து, ஒரே ஒரு சிக ரெட்டை உருவி நீட்டினான்.

சிகரெட் பாக்கெட்டுகள்தான் காஷ் கவுண்டருக்குக் கீழே இருக்கும் கண்ணாடி ஷோ-கேஸில் இறைந்து கிடக்கின்றனவே? இவனுக்கு மட்டும் எதற்கு இரும்புப் பெட் டகத்திலிருந்து ஒருதனிப்பட்ட சிகரெட்டை எடுத்துத் தர வேண்டும்?

கதோவிற்கு இதயத்தில் வலி எடுத்தது.

(தொடரும்)



''உன் மனைவியை எப்படிக் கொலை செய்தாய் என்று கொஞ்சம் விவரமாகச் சொல்லு!''

''என்ன எசமான்... உங்க வீட்லேயும் மனைவியால் ஏதாவது பிரச்னையா?''

- ஞா. ஞானமுத்து

# பங்கு மார்க்கெட் அழைக்கிறது!

ஐந்தோ, பத்தோ சேமித்திருக்கிறீர்களா? வைப்பு நிதியில் போட்டு வைக்கலாம். வட்டி மட்டுமே கிடைக்கும். பங்கு மார்க்கெட்டிலோ லாபப் பங்கீடு தவிர, மூலதனத்தின் மதிப்பும் உயர்கிறது. இதுதான் பங்குகள் வாங்குவதில் கூடுதல் அனுகூலம். ஆனால் குதிரைப் பந்தயம் போல் விளையாடுவதில் ''ரிஸ்க்'' உண்டு. எச்சரிக்கை தேவை. அண்மையில் விரிவாக்கம் கருதி பிரதான மார்க்கெட்டுக்கு வரவிருக்கும் பின்வரும் நிறுவனங்கள் நம்பகமானவை. துணிந்து முதலீடு செய்யலாம்.

## IIT CAPITAL SERVICES

பம்பாயில் அறுபது ஆண்டுகளாக நன்கு நடந்து வரும் நிறுவனம், இண்டஸ்ட்ரியல் இன்வெஸ்ட்மெண்ட் டிரஸ்ட். (IIT). இந்த நிறுவனத்தை நிர்வகிக்கும் குடும்பத்தின் மூத்த தலைமுறையைச் சேர்ந்த சேத் பிரேம்சந்த்தான், பம்பாய் பங்கு மார்க்கெட்டை நிறுவியவர். இந்தியப் பொருளாதாரத்தின் மையப் புள்ளியாக பம்பாய்ப் பொருளாதாரம் வளர்ச்சியுற உதவிய குடும்பம். இவர்கள் இப்போது, ஐ.ஐ.டி. கேபிடல் ஸர்விஸஸ் என்ற புதிய நிறுவனத்தைத் தொடங்குகிறார்கள். தொழிலகங்களுக்கு இயந்திரங்களை வாடகைக்கும் தவணை முறையிலும் பெற்றுத் தர உருவாக்கப்படும் நிறுவனம் இது.

இதற்காக முழுவதும் பங்குகளாக மாறக் கூடிய டிபன்சர் கடன் பத்திரங்களை வழங்குகிறார்கள். ஒவ்வொரு கடன் பத்திரத்தின் மதிப்பு ரூ 200. இதில் முதல் பகுதியான ரூ 100, ஒதுக்கீடு ஆன கையோடு பத்து பங்குகளாக மாறும். கூடுதல் விலை இல்லை. மீதம் ரூ 100, 18 மாதங்கள் சென்று ஐந்து பங்குகளாக மாறும். அதாவது ரூ 10 கூடுதல் விலை தந்து பங்குகளைப் பெறுவதாகிறது. கடன் பத்திரத்துக்கு வட்டி உண்டு. நல்ல முதலீடு.

## HINDUSTAN SANITARY WARE

கல்கத்தா நிறுவனமாகிய இது வாஷ்பேஸின், வாட்டர் க்ளோஸெட் போன்ற குளியலறை சாதனங்களையும் கண்ணாடிச் சாமான்களையும் உற்பத்தி செய்கிறது. இதுவரை மிகவும் வெற்றிகரமாகச் செயல்பட்டு வந்திருக்கிறது. விரிவாக்கம் கருதி மூலதனத்தை அதிகரித்துக் கொள்ள விரும்புகிறது. இதற்காக ஒவ்வொன்றும் ரூ 200 பெறுமானமுள்ள டிபன்சர் கடன் பத்திரங்களை விநியோகிக்கிறது. இதில் முதல் பகுதியான ரூ 70, ஒரு பங்காக ஒதுக்கீடு ஆன உடனேயே மாறிவிடும். அதாவது ஒவ்வொரு பங்கையும் ரூ 60 கூடுதல் விலை தந்து பெறுவதாகிறது. மீதமுள்ள ரூ 130, ஏழு ஆண்டுகளுக்குப் பிறகு திருப்பித் தரப்படும். இதற்கு 15 சதம் வட்டி உண்டு. 'ரூ 60 கூடுதல் விலையா!' என்று யோசிப்பவர்கள், இப்போது இந்த நிறுவனத்தின் பங்குகள் மார்க்கெட்டில் ரூ 160க்கு விலை போகின்றன என்பதைக் கவனிக்க வேண்டும்.

## ALACRITY ELECTORNICS

குடியிருப்புகள் (ஃப்ளாட்) கட்டி விற்பனை செய்யும் நிறுவனங்களில் அலாக்ரிடி மிகவும் பிரசித்தம். இந்த நிறுவனத்தின் ஒரு துணை நிறுவனமாக அலாக்ரிடி எலெக்ட்ரானிக்ஸ் உருவாகிறது. ''கிரை கார்ட்'' என்ற பெயரில் இவர்கள் வோல்டேஜ் பாதுகாப்புக் கருவிகள் தயாரிக்கப் போகின்றனர். இன்று கம்ப்யூட்டர்கள், ஏ.ஸி., ஃப்ரிட்ஜ் போன்ற பல சாதனங்களுக்கும் வோல்டேஜ் பாதுகாப்பு இன்றியமையாதது. 'ஸ்டெபிலைஸர்' என்றும் குறிப்பிடுவார்கள். இந்தப் புதிய நிறுவனத்துக்கு 225 லட்சம் மூலதனம் தேவை. ஒவ்வொன்றும் ரூ 10 பெறுமானமுள்ள 22,50,000 பங்குகள். அலாக்ரிடி நிறுவனத்துக்கு மார்க்கெட்டில் நல்ல பெயர். நீண்ட கால நோக்கில் சிறந்த முதலீடு.

– வி. கோபாலன்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka